## இயேசு சிலுவையில் அறையப்படவில்லை

அல்லாஹ் எனும் ஒரே ஒரு கடவுள் தான் இருக்கிறான். அவனைத் தவிர வேறு கடவுள் இல்லை. அவனைத் தவிர யாரையும், எதனையும் வணங்கக் கூடாது என்பதை நம்புவதும், மனிதர்களை நல்வழிப்படுத்த மனிதர்களில் இருந்தே தூதர்களை இறைவன் நியமித்து வந்தான். அந்தத் தூதர்கள் வரிசையில் இறுதியாக வந்தவர் முஹம்மது நபி என்பதை நம்புவதும் இஸ்லாத்தின் அடிப்படைக் கொள்கையாகும்.

இக்கொள்கையை ஒருவன் நம்பினால் தான் அவன் முஸ்லிமாக முடியும்.

உலகின் மிகப் பெரிய மதங்களில் ஒன்றாகத் திகழும் கிறித்தவ மதத்தின் கொள்கை என்ன? ஒருவன் கிறித்தவனாவதற்கு அவன் கொள்ள வேண்டிய கொள்கை என்ன?

கர்த்தர் (இறைவன்) முதன் முதலாக ஆதாம் என்பவரைப் படைத்தார். அவருக்குத் துணையாக ஏவாள் எனும் பெண்ணைப் படைத்து அவ்விருவரையும் ஏடன் எனும் தோட்டத்தில் தங்க வைத்து எல்லாவிதமான கனி வகைகளையும் அங்கே கிடைக்கச் செய்தார். இந்தத் தோட்டத்தில் விரும்பியவாறு உண்ணுங்கள்; ஆனால் குறிப்பிட்ட மரத்தின் கனியைப் புசித்து விட வேண்டாம் என்று கட்டளை பிறப்பித்திருந்தார்.

ஆதாமும் ஏவாளும் அந்தக் கட்டளையை மீறி தடுக்கப்பட்ட மரத்தின் கனியைப் புசித்தனர். இதனால் அவர்கள் பாவிகளானார்கள். அவர்கள் பாவிகளானதால் அவர்களின் சந்ததிகளும் பாவிகளாகப் பிறக்கின்றனர்.

எந்த ஒரு பாவம் செய்தாலும் அதற்குப் பாவ நிவாரணப் பலி கொடுக்க வேண்டும். ஆதாம் செய்த பாவத்தின் காரணமாக மனிதர்கள் பாவிகளாகப் பிறப்பதால் மிகப் பெரும் பலியைக் கொடுத்தால் தான் அந்தப் பாவம் மனிதனை விட்டு விலகும். அதற்காக இயேசு தன்னையே பலியிட்டு அனைவரின் பாவங்களுக்கும் பரிகாரம் தேடி விட்டார்.

இயேசு நமக்காக தன் உயிரையே கொடுத்தார் என்று ஒருவன் நம்பினால் தான் பிறவிப் பாவம் விலகும். இயேசு நமக்காகப் பலியானார் என்பதை யார் ஒப்புக் கொள்ளவில்லையோ அவரை விட்டு பிறவிப் பாவம் (ஜென்மப் பாவம்) நீங்காது.

இந்தக் கொள்கையின் மீது தான் கிறித்தவம் கட்டி எழுப்பப்பட்டுள்ளது.

இக்கொள்கையை கர்த்தரோ இயேசுவோ வழங்கவில்லை. இயேசுவுக்குப் பின் கிறித்தவ மதத்தில் இணைந்து கொண்ட பவுல் என்பவர் தான் இக்கொள்கையை உருவாக்கினார். இது குறித்து இந்நூலில் தனித் தலைப்பில் விளக்கப்பட்டுள்ளது.

இக்கொள்கையை வகுத்த பவுல் கூறியது பைபிளில் பின்வருமாறு இடம் பெற்றுள்ளது.

அப்படியிருந்தும் மரணமானது ஆதாம் முதல் மோசே வரைக்கும் ஆதாமின் மீறுதலுக்கொப்பாய்ப் பாவஞ் செய்யாதவர்களையும் ஆண்டு கொண்டது; அந்த ஆதாம் பின்பு வந்தவருக்கு முன்னடையாளமானவன்.

ரோமர் 5:14

அன்றியும் நாம் பெலனற்றவர்களாயிருக்கும் போதே குறித்த காலத்தில் கிறிஸ்து அக்கிரமக்காரருக்காக மரித்தார். நீதிமானுக்காக ஒருவன் மரிக்கிறது அரிது; நல்லவனுக்காக ஒரு வேளை ஒருவன் மரிக்கத் துணிவான்.

ரோமர் 5:6,7

நாம் பாவிகளாயிருக்கையில் கிறிஸ்து நமக்காக மரித்ததினாலே தேவன் நம் மேல் வைத்த தமது அன்பை விளங்கப் பண்ணுகிறார். இப்படி நாம் அவருடைய இரத்தத்தினாலே நீதிமான்களாக்கப் பட்டிருக்க கோபாக்கினைக்கு நீங்கலாக அவராலே நாம் இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே. .நாம் தேவனுக்குச் சத்துருக்களாயிருக்கையில் அவருடைய குமாரனின் மரணத்தினாலே அவருடனே ஒப்புரவாக்கப்பட்டோமானால் ஒப்புரவாக்கப்பட்ட பின் நாம் அவருடைய ஜீவனாலே இரட்சிக்கப்படுவது அதிக நிச்சயமாமே.

ரோமர் 5:8-10

என்னவென்றால் கரத்தராகிய இயேசுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்திலே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய்.

ரோமர் 10:9

வெள்ளாட்டுக்கடா இளங்காளை இவைகளுடைய இரத்தத்தினாலே அல்ல தம்முடைய சொந்த இரத்தத்தினாலும் ஒரே தரம் மகா பரிசுத்த ஸ்தலத்திலே பிரவேசித்து நித்திய மீட்பை உண்டு பண்ணினார். அதெப்படியெனில் காளை, வெள்ளாட்டுக்கடா, இவைகளின் இரத்தமும் தீட்டுப்பட்டவர்கள் மேல் தெளிக்கப்பட்ட கடாரியின் சாம்பலும் சரீர சுத்தியுண்டாகும்படி பரிசுத்தப்படுத்துமானால் நித்திய ஆவியினாலே தம்மைத் தாமே பழுதற்ற பலியாகத் தேவனுக்கு ஒப்புக் கொடுத்த கிறிஸ்துவினுடைய இரத்தம் ஜீவனுள்ள தேவனுக்கு ஊழியஞ்செய்வதற்கு உங்கள் மனச்சாட்சியைச் செத்த கிரியைகளறச் சுத்திகரிப்பது எவ்வளவு நிச்சயம்!

எபிரேயர் 9:12-14

1இயேசு கிறிஸ்துவினுடைய சரீரம் ஒரே தரம் பலியிடப்பட்டதினாலே அந்தச் சித்தத்தின் படி நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம்.

எபிரேயர் 10:10

இது தான் பவுல் உருவாக்கிய கிறித்தவ மதத்தின் அடிப்படைச் சித்தாந்தம்.

இந்தக் கொள்கை இயேசுவும், அவருக்கு முன் சென்ற நீதிமான்களும் போதித்த கொள்கைக்கு முரணாக அமைந்துள்ளது. மேலும் பகுத்தறிவுக்கும், உலக நடைமுறைக்கும் எதிராக அமைந்துள்ளது.

இந்தக் கொள்கைக்கும் இயேசுவுக்கும் ஏதாவது சம்மந்தம் உண்டா என்பதை ஆய்வு செய்வதற்கு முன்னால் இக்கொள்கையைப் பரப்பும் கிறித்தவ மத

குருமார்கள் நம்பிக்கைக்கு உரியவர்களா? இயேசுவின் வழிகாட்டுதலைப் பேணி நடப்பவர்களா என்பதை அறிந்து கொள்வது அவசியம்.

## பங்குத் தந்தைகள் நம்பிக்கைக்கு உரியவர்களா?

இயேசுவின் சிலுவைப் பலி கொள்கை சரியானது தானா என்பதை அறிந்து கொள்வதற்கு முன்னாள் இந்தக் கொள்கையைச் சொல்பவர்களின் நம்பகத் தன்மையை கிறித்தவ சமுதாய மக்களுக்குத் தெளிவுபடுத்துகிறோம்.

ஏனெனில் இவர்கள் தான் கர்த்தருக்கும் இயேசுவுக்கும் எதிரான இக்கொள்கையைப் பிரச்சாரம் செய்பவர்கள். தாங்கள் கூறுவது பைபிளுக்கு எதிரானது என்று தெரிந்து கொண்டே தான் இக்கொள்கையைப் பிரச்சாரம் செய்கின்றனர். தமக்குச் சாதகமான சில வசனங்களை மட்டும் தமது சுய நலனுக்குப் பயன்படுத்திக் கொள்கின்றனர். எனவே பரலோக ராஜ்ஜியத்தில் மக்கள் பிரவேசிக்காமல் முட்டுக்கட்டை போடும் இவர்களைப் பற்றி கிறித்தவ மக்கள் சரியாகப் புரிந்து கொள்வது அவசியமாகும்.

இந்தக் கொள்கையைத் தீவிரமாகப் பிரச்சாரம் செய்து வரும் பங்குத் தந்தைகளும், பாதிரிகளும் பிற மதங்களில் மக்களுக்கு வழங்கப்பட்டுள்ள ஆலய நிர்வாக உரிமையை கிறித்தவ மக்களுக்கு வழங்குவதில்லை. ஆலயங்களின் முழுக் கட்டுப்பாட்டையும் தங்கள் கைகளில் வைத்துக் கொள்கின்றனர்.

அவர்கள் கோடி கோடியாகக் கொள்ளை அடித்தாலும் அவர்களை யாரும் தட்டிக் கேட்க முடியாது. அவர்களை எதிர்த்தால் இறந்தவர்களைக் கல்லறையில் அடக்கம் செய்ய முடியாது. கிறித்தவ மக்கள் தங்கள் குடும்பத்தின் திருமணம் உள்ளிட்ட எந்தச் சடங்கையும் தேவாலயத்தில் செய்ய முடியாது.

யார் ஆலயங்களுக்கு அள்ளிக் கொடுக்கிறார்களோ அவர்களுக்கு எந்த விதமான உரிமையும் இல்லை என்ற கடும் கோட்பாடு காரணமாக சுதந்திரமாக யாரும் சிந்திக்க முடியாத நிலையையும், சிந்தித்துக் கண்டறிந்த உண்மைகளை வெளியே பேச முடியாத நிலையையும் பாதிரிமார்கள் ஏற்படுத்தி விட்டனர்.

இதைக் கிறித்தவ மதத்தில் அங்கம் வகிக்கும் மக்கள் சிந்தித்துப் பார்க்கக் கடமைப்பட்டுள்ளனர்.

ஃபாதர் என்ற பட்டத்தைச் சூட்டிக் கொண்டு இவர்கள் செய்யும் ஊழியத்தையும், இது குறித்து இயேசு கூறியதையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இவர்களுக்கும் இயேசுவுக்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை என்பதை அறியலாம்

தங்கள் கிரியைகளையெல்லாம் மனுஷர் காண வேண்டுமென்று செய்கிறார்கள். தங்கள் காப்பு நாடாக்களை அகலமாக்கி தங்கள் வஸ்திரங்களின் தொங்கல்களைப் பெரிதாக்கி விருந்துகளில் முதன்மையான இடங்களையும், ஜெப ஆலயங்களில் முதன்மையான ஆசனங்களையும், சந்தை வெளிகளில் வந்தனங்களையும், மனுஷரால் ரபீ ரபீ என்று அழைக்கப்படுவதையும் விரும்புகிறார்கள். நீங்களோ ரபீ என்றழைக்கப்படாதிருங்கள். கிறிஸ்து ஒருவரே உங்களுக்குப் போதகராயிருக்கிறார். நீங்கள் எல்லாரும் சகோதரராயிருக்கிறீர்கள். பூமியிலே ஒருவனையும் உங்கள் பிதா என்று சொல்லாதிருங்கள்! பரலோகத்திலிருக்கிற ஒருவரே உங்களுக்குப் பிதாவாயிருக்கிறார். நீங்கள் குருக்கள் என்றும் அழைக்கப்படாதிருங்கள்! கிறிஸ்து ஒருவரே உங்களுக்குக் குருவாயிருக்கிறார்.

மத்தேயு 23:5

ஃபாதர் (பிதா) என்று ஒருவரையும் அழைக்கக் கூடாது என்று இயேசு தெளிவாகக் கட்டளை இட்டிருக்க இவர்களோ பிதா (ஃபாதர்) என்று தங்களை அழைத்துக் கொள்வதன் மூலம் இயேசுவுக்கு எதிரிகளாக ஆகி விட்டனர்.

மேலும் மத குருக்கள் என்று தாங்கள் அழைக்கப்பட வேண்டும் என்றும் இவர்கள் விரும்புகிறார்கள். ஆனால் இயேசுவைத் தவிர யாரும் யாருக்கும் குருவாக முடியாது என்று இயேசு கூறியதையும் மீறுகிறார்கள்.

தங்களைப் பிற மக்களிடமிருந்து வேறுபடுத்தி தங்களை உயர்ந்தவர்களாகக் காட்டிக் கொள்வதற்காக வழக்கத்தில் இல்லாத வகையில் நீண்ட அங்கிகளை அணிகிறார்கள். விருந்துகளிலும், ஜெப ஆலயங்களிலும், கடை வீதிகளிலும் தமக்குத் தனி மரியாதை தரப்பட வேண்டும் என்றும் ஆசைப்படுகிறார்கள்.

இவர்களுக்கும், இயேசுவுக்கும் என்ன சம்மந்தம்? என்று கிறித்தவ சகோதரர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

இயேசுவுக்கு ஊழியம் செய்கிறோம் என்ற பெயரில் தேவாலயங்களிலும், தொலைக் காட்சிகளிலும் இவர்கள் செய்யும் பிரச்சாரத்தை நீங்கள் பார்க்கிறீர்கள். அதற்கும் இயேசுவுக்கும் எந்தச் சம்மந்தமுமில்லை என்பதைப் பைபிளின் பின்வரும் வசனங்கள் நிரூபிக்கின்றன.

அன்றியும் நீ ஜெபம் பண்ணும் போது மாயக்காரரைப் போலிருக்க வேண்டாம். மனுஷர் காணும்படியாக அவர்கள் ஜெப ஆலயங்களிலும் வீதிகளின் சந்திகளிலும் நின்று ஜெபம் பண்ண விரும்புகிறார்கள். அவர்கள் தங்கள் பலனை அடைந்து தீர்ந்ததென்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன். நீயோ ஜெபம் பண்ணும் போது உன் அறை வீட்டிற்குள் பிரவேசித்து உன் கதவைப் பூட்டி அந்தரங்கத்திலிருக்கிற உன் பிதாவை நோக்கி ஜெபம் பண்ணு! அப்பொழுது அந்தரங்கத்தில் பார்க்கிற உன் பிதா வெளியரங்கமாய் உனக்குப் பலனளிப்பார். அன்றியும் நீங்கள் ஜெபம் பண்ணும் போது அஞ்ஞானிகளைப் போல வீண் வார்த்தைகளை அலப்பாதேயுங்கள்! அவர்கள் அதிக வசனிப்பினால் தங்கள் ஜெபம் கேட்கப்படுமென்று நினைக்கிறார்கள். அவர்களைப் போல நீங்கள் செய்யாதிருங்கள்! உங்கள் பிதாவை நோக்கி நீங்கள் வேண்டிக் கொள்ளுகிறதற்கு முன்னமே உங்களுக்கு இன்னது தேவை என்று அவர் அறிந்திருக்கிறார்.

மத்தேயு 6:5-8

கடவுளிடம் ஜெபிக்கும் போது வீண் வார்த்தைகளைக் கூறி அலப்பக் கூடாது என்று இயேசு கூறுகிறார். மேலும் இரகசியமாக வீட்டின் கதவைப் பூட்டிக் கொண்டு தான் ஜெபம் செய்ய வேண்டும் என்று இயேசு கூறுகிறார். ஆனால் மத போதகர்கள் கர்த்தரிடம் பிரார்த்தனை செய்யும் போது கடவுளை உருட்டி மிரட்டி கட்டளை இடும் விதமாக ஜெபிக்கிறார்கள். மேலும் ஆலயங்களில் ஜெபிப்பதோடு நிறுத்திக் கொள்ளாமல் திறந்த வெளி மைதானங்களிலும்

இவர்கள் செய்யும் அலப்பறையைப் பார்க்கும் போது இயேசு இவர்களைக் குறித்தே மேற்கண்ட எச்சரிக்கை விட்டுள்ளார் என்பதை அறிந்து கொள்ளலாம்.

படிப்பறிவில்லாத ஏழை மக்களுக்குப் பணத்தாசை காட்டி மதமாற்றம் செய்வதற்கும் இவர்கள் அலைந்து திரிகின்றனர். ஆனால் மதத்தில் சேர்த்தவுடன் அவர்களுக்கு இயேசு கூறிய கொள்கையைக் கூறாமல் அவன் நரகத்துக்குப் போகும் வழியை இவர்கள் காட்டுகின்றனர்.

மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ! மனுஷர் பிரவேசியாதபடி பரலோக ராஜ்யத்தைப் பூட்டிப் போடுகிறீர்கள்;. நீங்கள் அதில் பிரவேசிக்கிறதுமில்லை. பிரவேசிக்கப் போகிறவர்களைப் பிரவேசிக்க விடுகிறதுமில்லை. மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ! பார்வைக்காக நீண்ட ஜெபம் பண்ணி விதவைகளின் வீடுகளைப் பட்சித்துப் போடுகிறீர்கள். இதினிமித்தம் அதிக ஆக்கினையை அடைவீர்கள். மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ! ஒருவனை உங்கள் மார்க்கத்தானாக்கும்படி சமுத்திரத்தையும், பூமியையும் சுற்றித் திரிகிறீர்கள். அவன் உங்கள் மார்க்கத்தானான போது அவனை உங்களிலும் இரட்டிப்பாய் நரகத்தின் மகனாக்குகிறீர்கள்.

மத்தேயு 23:13-15

இயேசுவின் இந்த எச்சரிக்கை அப்படியே இன்றைய கிறித்தவப் பாதிரிகளுக்குப் பொருந்துவதையும் கிறித்தவ அன்பர்கள் சிந்தித்துப் பார்க்கக் கடமைப்பட்டுள்ளார்கள்.

கர்த்தருக்கு ஊழியம் செய்பவர் காசு பணம் சேர்க்கக் கூடாது; எதையும் சேமித்து வைக்கக் கூடாது என்று இயேசு தெளிவான இலக்கணம் கூறிச் சென்றுள்ளார்.

உங்கள் கச்சைகளில் பொன்னையாவது வெள்ளியையாவது செம்பையாவது வழிக்காகப் பையையாவது இரண்டு அங்கிகளையாவது பாதரட்சைகளையாவது தடியையாவது தேடி வைக்க வேண்டாம்! வேலையாள் தன் ஆகாரத்துக்குப் பாத்திரனாயிருக்கிறான்.

மத்தேயு 10:9,10

தங்கம், வெள்ளி, செம்பு போன்ற உலோகங்களைச் சேர்க்கக் கூடாது என்றும் ஒரு பையைக் கூட எடுத்துச் செல்லக் கூடாது என்றும், மாற்று உடைகளைக் கூட எடுத்துச் செல்லக் கூடாது என்றும் செருப்பையும் கைத்தடியையும் கூட வைத்துக் கொள்ளக் கூடாது என்றும் இயேசு மிகத் தெளிவாகக் கட்டளை இட்டுள்ளார். ஆனால் இன்று கர்த்தருக்கு ஊழியம் செய்பவர்கள் ஊரை வளைத்துப் போடுகிறார்கள். கோடாணுகோடி ரூபாய்களுக்குச் சொத்துக்களைச் சேர்த்துள்ளனர். வெளிநாட்டுப் பணக்காரர்களை ஏமாற்றி பணத்தைக் குவிக்கின்றனர். இவர்களுக்கும் இயேசுவுக்கும் ஏதாவது சம்மந்தம் உள்ளதா என்பதையும் கிறித்தவ அன்பர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

மதமாற்றத்துக்கு ஆள் பிடிக்க கொல்லைப் புறமாக வந்து மக்களை ஏமாற்றுவதையும் இவர்கள் கொள்கையாகக் கொண்டுள்ளனர்.

முஸ்லிம்களிடம் பிரச்சாரம் செய்யும் போது அரபுச் சொற்களைப் பயன்படுத்தியும், குர்ஆன் வசனங்களைப் பொருத்தமற்ற இடங்களில் பயன்படுத்தியும் வருகின்றனர். அதாவது இஸ்லாமே இவர்களின் கொள்கையை ஏற்றுக் கொள்வது போல் மக்களை ஏமாற்றுகின்றனர். இஸ்லாத்தில் இருந்து கிறித்துவராக மாறிய சகோதரர் நற்செய்தி அளிக்கிறார் என்றும் புளுகி குறுக்கு வழியில் ஆள் பிடித்து வருகின்றன.

இதையும் இயேசு மிகத் தெளிவாக எச்சரிக்கை செய்துள்ளதைப் பாருங்கள்.

மெய்யாகவே மெய்யாகவே நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.; ஆட்டுத் தொழுவத்துக்குள் வாசல் வழியாய்ப் பிரவேசியாமல் வேறு வழியாய் ஏறுகிறவன் கள்ளனும் கொள்ளைக்காரனுமாயிருக்கிறான். வாசல் வழியாய்ப் பிரவேசிக்கிறவனோ ஆடுகளின் மேய்ப்பனாயிருக்கிறான்.

யோவான் 10:1

கள்ளத் தீர்க்கதரிசிகளுக்கு எச்சரிக்கையாயிருங்கள்!; அவர்கள் ஆட்டுத் தோலைப் போர்த்துக் கொண்டு உங்களிடத்தில் வருவார்கள். உள்ளத்திலோ அவர்கள் பட்சிக்கிற ஓநாய்கள்.

மத்தேயு 7:15

குருடர் பார்க்கிறார் என்றும் செவிடர் கேட்கிறார் என்றும் முடவர் நடக்கிறார் என்றும் மக்களைக் கூட்டி வைத்துக் கொண்டு நாடகம் நடத்துகின்றனர். பேய்களைத் துரத்துகிறோம் என்று மக்களை அச்சுறுத்தி வருகின்றனர். இன்னொரு புறம் அதிகமான மருத்துவ மனைகளையும் இவர்கள் தான் நடத்துகின்றனர்.

இவர்கள் கூறுவது உண்மையானால் நாட்டில் உள்ள எல்லா குருடர்களுக்கும் பார்வை வழங்கிக் காட்டட்டும். குருடனைப் போல் நடிக்க வைத்து அவனுக்கு பார்வை வந்தது போல் நடிக்கச் செய்து மக்களை ஏமாற்றுகின்றனர். மதத்தைப் பரப்புவதற்காகப் பொய் சொல்லலாம் என்று வேதப் புத்தகத்திலேயே எழுதி வைத்துக் கொண்டவர்கள் இவர்கள்.

அன்றியும் என் பொய்யினாலே தேவனுடைய சத்தியம் அவருக்கு மகிமையுண்டாக விளங்கினதுண்டானால் இனி நான் பாவியென்று தீர்க்கப்படுவானேன்?

முதலாம் கொரிந்தியர்-9:7

உலகில் பொய் சொல்லி மக்களை ஏமாற்றி ஆள் பிடிக்கலாம் என்பதை வேதத்திலேயே எழுதி வைத்துக் கொண்டவர்கள் இவர்கள் மட்டுமே.

இது குறித்தும் இயேசு எச்சரிக்கை செய்துள்ளார்.

அநேகங் கள்ளத்தீர்க்கதரிசிகளும் எழும்பி அநேகரை வஞ்சிப்பார்கள்.

மத்தேயு 24:11

இயேசு அதோ வருகிறார்; இதோ வருகிறார்; அதோ இறங்குகிறார் எனவும் மக்களிடம் பிரச்சாரம் செய்கின்றனர். ஜெபம் செய்யும் போது இறங்குவீராக என்று இயேசுவுக்குக் கட்டளையும் போடுகிறார்கள். இதையும் இயேசு மிகத் தெளிவாக எச்சரித்துள்ளார்.

அப்பொழுது இதோ கிறிஸ்து இங்கே இருக்கிறார்; அதோ அங்கே இருக்கிறார் என்று எவனாகிலும் சொன்னால் நம்பாதேயுங்கள். ஏனெனில் கள்ளக் கிறிஸ்துக்களும் கள்ளத் தீர்க்கதரிசிகளும் எழும்பி, கூடுமானால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாகப் பெரிய அடையாளங்களையும் அற்புதங்களையும் செய்வார்கள். இதோ முன்னதாக உங்களுக்கு அறிவித்திருக்கிறேன். ஆகையால்: அதோ வனாந்தரத்தில் இருக்கிறார் என்று சொல்வார்களானால் புறப்படாதிருங்கள்! இதோ அறை வீட்டிற்குள் இருக்கிறார் என்று சொல்வார்களானால் நம்பாதிருங்கள். மின்னல் கிழக்கிலிருந்து தோன்றி மேற்கு வரைக்கும் பிரகாசிக்கிறது போல மனுஷகுமாரனுடைய வருகையும் இருக்கும்.

மத்தேயு 24:23-27

அப்பொழுது: இதோ கிறிஸ்து இங்கே இருக்கிறார் அதோ அங்கேயிருக்கிறார் என்று எவனாகிலும் சொன்னால் நம்பாதேயுங்கள். ஏனெனில் கள்ளக் கிறிஸ்துக்களும் கள்ளத் தீர்க்கதரிசிகளும் எழும்பி கூடுமானால் தெரிந்து கொள்ளப்பட்டவர்களையும் வஞ்சிக்கத்தக்கதாக அடையாளங்களையும் அற்புதங்களையும் செய்வார்கள்.

மாற்கு 13:21,22

இயேசு சொல்வதை இன்னும் கேளுங்கள்!

குருடரான வழிகாட்டிகளே கொசுயில்லாதபடி வடிகட்டி ஒட்டகத்தை விழுங்குகிறவர்களாயிருக்கிறீர் கள். மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ! போஜன பான பாத்திரங்களின் வெளிப்புறத்தைச் சுத்தமாக்குகிறீர்கள். உட்புறத்திலோ அவைகள் கொள்ளையினாலும்

அநீதத்தினாலும் நிறைந்திருக்கிறது. குருடனான பரிசேயனே! போஜனபான பாத்திரங்களின் வெளிப்புறம் சுத்தமாகும்படி அவைகளின் உட்புறத்தை முதலாவது சுத்தமாக்கு. மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ!

வெள்ளையடிக்கப்பட்ட கல்லறைகளுக்கு ஒப்பாயிருக்கிறீர்கள். அவைகள் புறம்பே அலங்காரமாய்க் காணப்படும். உள்ளேயோ மரித்தவர்களின் எலும்புகளினாலும் சகல அசுத்தத்தினாலும் நிறைந்திருக்கும். அப்படியே நீங்களும் மனுஷருக்கு நீதிமான்கள் என்று புறம்பே காணப்படுகிறீர்கள்;. உள்ளத்திலோ மாயத்தினாலும் அக்கிரமத்தினாலும் நிறைந்திருக்கிறீர்கள். மாயக்காரராகிய வேதபாரகரே! பரிசேயரே! உங்களுக்கு ஐயோ. நீங்கள் தீர்க்கதரிசிகளின் கல்லறைகளைக் கட்டி நீதிமான்களின் சமாதிகளைச் சிங்காரித்து: எங்கள் பிதாக்களின் நாட்களில் இருந்தோமானால் அவர்களோடே நாங்கள் தீர்க்கதரிசிகளின் இரத்தப் பழிக்கு உடன்பட்டிருக்க மாட்டோம் என்கிறீர்கள்.

மத்தேயு 23:24-30

அந்நாளில் அநேகர் என்னை நோக்கி: கர்த்தாவே! கர்த்தாவே! உமது நாமத்தினாலே தீர்க்கதரிசனம் உரைத்தோம் அல்லவா? உமது நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்தினோம் அல்லவா? உமது நாமத்தினாலே அநேக அற்புதங்களைச் செய்தோம் அல்லவா? என்பார்கள். அப்பொழுது நான் ஒருக்காலும் உங்களை அறியவில்லை. அக்கிரமச் செய்கைக்காரரே என்னைவிட்டு அகன்று போங்கள் என்று அவர்களுக்குச் சொல்லுவேன்.

மத்தேயு 7:22,23

மேலும் இவர்கள் இயேசுவுக்கும் மேரிக்கும் சிலைகளை நிறுவி அதை வழிபடுகின்றனர். விக்கிரக(சிலை) வழிபாட்டை இயேசு அறவே மறுத்துள்ளார் என்பதை மறந்து விட்டனர். பில்லி சூனியம் என்றெல்லாம் கூறி மக்களை

ஏமாற்றுகின்றனர். அதையும் இயேசு கண்டித்திருப்பதைப் பைபிள் பின்வருமாறு கூறுகிறது.

மாம்சத்தின் கிரியைகள் வெளியரங்கமாயிருக்கின்றன. அவையாவன: விபசாரம், வேசித்தனம், அசுத்தம், காமவிகாரம், விக்கிரகாராதனை, பில்லி சூனியம், பகைகள், விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்கள், சண்டைகள், பிரிவினைகள், மார்க்கபேதங்கள், பொறாமைகள், கொலைகள், வெறிகள், களியாட்டுகள் முதலானவைகளே. இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவர்கள் தேவனுடைய ராஜ்யத்தைச் சுதந்தரிப்பதில்லையென்று முன்னே நான் சொன்னது போல இப்பொழுதும் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

கலாத்தியர் 5:19-21

பைபிளைக் கையில் வைத்துக் கொண்டு தங்களுக்குச் சாதகமானதை மட்டும் மக்கள் மத்தியில் வாசித்து பிரச்சாரம் செய்யும் கிறித்தவ போதகர்கள் உண்மையில் பைபிளின் போதனைகளை மீறி வருகிறார்கள் என்பதே உண்மை.

இவர்களின் தனிப்பட்ட ஒழுக்க வாழ்க்கை போப் ஆண்டவர் அடிக்கடி உலக மக்களிடம் மன்னிப்பு கேட்கும் அளவுக்கு கேவலமாக உள்ளதையும் கிறித்தவர்கள் எண்ணிப் பார்த்து சுயமாகச் சிந்தித்தால் இயேசுவின் சிலுவைப் பலி என்ற கொள்கை இயேசுவின் போதனைக்கு எதிரானது என்பதை அறிந்து கொள்வார்கள்.

## கிறித்தவக் கொள்கையை உருவாக்கியவர் யார்?

கிறித்தவ மதத்தின் இந்தக் கோட்பாடு இயேசுவால் உருவாக்கப்பட்டதா?

பைபிளின் புதிய ஏற்பாட்டில் மத்தேயு மாற்கு, லூக்கா யோவான் ஆகிய நான்கு சுவிஷேசங்களும், பவுல் என்பவர் பலருக்கு எழுதிய கடிதங்களும் இடம் பெற்றுள்ளன.

இயேசுவின் சீடர்கள் தாம் கண்ணாரக் கண்டதைத் தான் சுவிஷேசங்களாக எழுதினார்கள் என்று அப்பாவி கிறித்தவர்கள் நம்ப வைக்கப்பட்டுள்ளனர். பைபிளில் உள்ள நான்கு சுவிஷேசங்களும் 23 நிருபங்களும் இயேசுவின் சீடர்கள் எழுதியவை அல்ல என்பதை முதலில் கிறித்தவ அன்பர்கள் அறிந்து கொள்ள வேண்டும்.

சுவிசேஷம் எழுதிய நால்வர் யார்? பவுல் என்பவர் யார் என்பதை முதலில் கிறித்தவ நண்பர்கள் அறிந்து கொள்ள வேண்டும்.

## பன்னிரண்டு சீடர்கள்

இயேசுவுக்குப் பன்னிரண்டு சீடர்கள் இருந்தனர். அவர்களின் பெயர்களைப் பைபிள் பின்வருமாறு பட்டியல் இடுகிறது.

அப்பொழுது அவர் தம்முடைய பன்னிரண்டு சீஷர்களையும் தம்மிடத்தில் வரவழைத்து அசுத்த ஆவிகளைத் துரத்தவும் சகல வியாதிகளையும் சகல நோய்களையும் நீக்கவும் அவர்களுக்கு அதிகாரங்கொடுத்தார். அந்தப் பன்னிரண்டு அப்போஸ்தலருடைய நாமங்களாவன: முந்தினவன் 1பேதுரு என்னப்பட்ட சீமோன், 2அவன் சகோதரன் அந்திரேயா, 3செபெதேயுவின் குமாரன் யாக்கோபு, 4அவன் சகோதரன் யோவான், 5பிலிப்பு, 6பற்தொலொமேயு, 7தோமா 8ஆயக்காரனாகிய மத்தேயு, 9அல்பேயுவின் குமாரன் யாக்கோபு, 10ததேயு என்னும் மறுநாமமுள்ள லெபேயு, 11கானானியனாகிய சீமோன், 12அவரைக் காட்டிக் கொடுத்த யூதாஸ்காரியோத்து என்பவைகளே.

மத்தேயு 10:1-4

அப்பொழுது அவர் பன்னிரண்டு பேரைத் தெரிந்து கொண்டு அவர்கள் தம்மோடு கூட இருக்கவும் பிரசங்கம் பண்ணும்படியாகத் தாம் அவர்களை அனுப்பவும் வியாதிகளைக் குணமாக்கிப் பிசாசுகளைத் துரத்தும்படி அவர்கள் அதிகாரமுடையவர்களா யிருக்கவும் அவர்களை ஏற்படுத்தினார். அவர்கள் யாரெனில் சீமோன் இவனுக்குப் பேதுரு என்கிற பெயரிட்டார். செபெதேயுவின் குமாரனாகிய யாக்கோபு, யாக்கோபின் சகோதரனாகிய யோவான் இவ்விருவருக்கும் இடிமுழக்க மக்களென்று அரத்தங்கொள்ளும் பொவனெரகேஸ் என்கிற பெயரிட்டார். அந்திரேயா, பிலிப்பு, பற்தொலொமேயு, மத்தேயு, தோமா, அல்போயுவின் குமாரன் யாக்கோபு, ததேயு, கானானியனாகிய சீமோன், அவரைக் காட்டிக் கொடுத்த யூதாஸ்காரியோத்து என்பவர்களே.

மாற்கு 3:14-19

மேற்கண்ட பன்னிரண்டு பேர் தான் இயேசுவின் சீடர்கள் என்று மத்தேயுவும் மாற்குவும் கூறுகின்றனர்.

## மாற்கு சுவிஷேம்

பைபிள் புதிய ஏற்பாட்டின் நான்கு சுவிஷேசங்களில் மத்தேயு சுவிஷேசம் முதலாவதாக அமைக்கப்பட்டிருந்தாலும் எழுதப்பட்ட வரிசைப்படி பார்த்தால் மாற்கு தான் முதலில் எழுதப்பட்டதாகும். இது குறித்து விக்கி பீடியா தகவல் களஞ்சியம் பின்வருமாறு குறிப்பிடுகிறது.

மாற்கு நற்செய்தி கிறிஸ்தவ விவிலியத்தின் புதிய ஏற்பாட்டு நற்செய்தி நூல்களில் இரண்டாவது நூலாகும். இயேசுவின் திருமுழுக்கிலிருந்து (ஞானஸ்நானம்) நூல் ஆரம்பிக்கிறது. இயேசுவின் வாழ்வின் கடைசி வாரத்துக்கு முக்கியத்துவம் கொடுத்து எழுதப்பட்டுள்ளது. கி.பி.60-80 இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்டது. நான்கு நற்செய்தி நூல்களில் முதலவதாக எழுதப்பட்டது எனக் கருதப்படுகிறது. மொத்தம் 16 அதிகாரங்களில் 678 வசனங்களைக் கொண்டுள்ளது.

மாற்கு புனித இராயப்பரின் (பேதுரு எனும் பீட்டரின்) சீடராவார். இராயப்பர் இயேசு பற்றிக் கூறியவற்றையும் வேறு மூலங்களிலிருந்து தான் பெற்ற தகவல்களையும் தொகுத்து, மாற்கு நற்செய்தி எழுதினாரென்று கருதப்படுகிறது. மூல நூல் கிரேக்க மொழியில் எழுதப்பட்டது. மாற்கு இந்நூலை எழுதும் போது உரோமயில் இருந்ததாக முன்னர் கருதப்பட்டாலும் அவர் சிரியாவில் இருந்தே இந்நூலை எழுதினார் என்ற கருத்து இப்போது மேலோங்கியுள்ளது.

முதன் முதலில் சுவிஷேசம் எழுதிய மாற்கு மேற்கண்ட பன்னிரண்டு சீடர்களில் இடம் பெறவில்லை. மாறாக இயேசுவின் சீடராகிய பேதுரு எனும் பீட்டருக்கு இவர் சீடராக இருந்தார். இவர் எழுதிய அனைத்தும் இவர் கண்ணால் பார்த்து எழுதியதல்ல. பீட்டரிடம் கேட்டவைகளை எழுதியதாகவும் அவர் குறிப்பிடவில்லை. இயேசுவைப் பார்த்திராத இவர், செவி வழியாகப் பேசிக் கொள்ளப்பட்ட செய்திகளை அடிப்படையாக வைத்தே தனது சுவிஷேசத்தை எழுதியுள்ளார் என்பது உறுதியாகிறது.

## மத்தேயு சுவிஷேம்

மத்தேயு என்ற பெயர் சீடர்களின் பட்டியலில் இருந்தாலும் சுவிசேஷம் எழுதியது அந்த மத்தேயு அல்ல என்று ஆய்வாளர்கள் கூறுகின்றனர். இயேசுவின் சீடராகிய மத்தேயுவாக இருந்தால் மாற்குவை முந்திக் கொண்டு இவர் சுவிசேஷம் எழுதி இருப்பார். இயேசுவின் சீடருக்குச் சீடரான மாற்குவிற்குப் பிறகு தான் மத்தேயு எழுதப்பட்டது என்பதால் இது இயேசுவின் சீடராகிய மத்தேயு எழுதியது அல்ல. இவர் வேறொரு மத்தேயுவாக இருக்கலாம்; அல்லது வேறு யாரோ எழுதி மத்தேயு பெயரில் வெளியிட்டிருக்கலாம் என்பது தான் ஆய்வாளர்களின் கருத்தாகும்.

இது குறித்து விக்கி பீடியா இவ்வாறு கூறுகிறது.

மத்தேயு நற்செய்தி விவிலியத்தின் புதிய ஏற்பாட்டிலுள்ள நான்கு நற்செய்தி நூல்களின் முதலாவது நூலாகும். இது இயேசுவின் வாழ்க்கை வரலாற்றைக்

குறிக்கிறது. இந்நூல் புதிய ஏற்பாட்டின் முதலாவது நூலாகும். இது இயேசுவின் சீடரான மத்தேயுவின் பெயரைக் கொண்டுள்ளது எனினும் இந்நூலின் எழுத்தாளர் அவரா என்பது கேள்விக்குரியதே. வேறு ஒருவர் எழுதி புனித மத்தேயுவின் பெயரில் வெளியிட்டிருக்கலாம் என்பது இப்போது ஏற்கப்பட்ட கருத்தாகும். மற்ற நற்செய்தி நூல்களான மாற்கு, லூக்கா என்பவற்றுடன் பொதுவான வசன எடுத்தாள்கையும், உள்ளடக்கத்தையும் கொண்டுள்ளது.

## லூக்கா சுவிசேஷம்

மூன்றாவது சுவிஷேசக்காரராகிய லூக்கா என்பவரும் பன்னிரண்டு சீடர்களில் ஒருவர் அல்ல. மற்றவர்கள் கூறக் கேட்டதையே தான் எழுதியதாக இவர் வெளிப்படையாக ஒப்புக் கொள்கிறார்.

மகா கனம்பொருந்திய தேயோப்பிலுவே நாங்கள் முழுநிச்சயமாய் நம்புகிற சங்கதிகளை ஆரம்ப முதல் கண்ணாரக் கண்டு வசனத்தைப் போதித்தவர்கள் எங்களுக்கு ஒப்புவித்தபடியே அவைகளைக் குறித்துச் சரித்திரம் எழுத அநேகம் பேர் ஏற்பட்டபடியினால் ஆதி முதல் எல்லாவற்றையும் திட்டமாய் விசாரித்தறிந்த நானும் உமக்கு உபதேசிக்கப்பட்ட விசேஷங்களின் நிச்சயத்தை நீர் அறிய வேண்டுமென்று அவைகளை ஒழுங்காய் உமக்கு எழுதுவது எனக்கு நலமாய்த் தோன்றிற்று.

லூக்கா 1:1-4

மற்றவர்கள் கூறக் கேட்டதையே தான் எழுதுவதாக எடுத்த எடுப்பிலேயே லூக்கா ஒப்புக் கொள்கிறார்.

இவர் மிகவும் பிந்தியவராவார். கிறித்தவத்தின் சிலுவைக் கோட்பாட்டை உருவாக்கிய பவுலின் சீடர்களில் லூக்காவும் ஒருவர்.

## யோவான் சுவிஷேசம்

இயேசுவின் சீடர்களில் யோவான் என்ற பெயரில் ஒருவர் இருப்பதால் அவர் எழுதியதே யோவான் சுவிஷேசம் என்று பாமர மக்கள் நம்புகின்றனர். ஆனால் ஆய்வாளர்கள் அதை ஏற்றுக் கொள்ளவில்லை.

இயெசுவின் நேரடிச் சீடரான யோவான் இதை எழுதி இருந்தால் இது தான் முதலில் எழுதப்பட்டிருக்க வேண்டும். இது எழுதப்பட்ட காலம் கிபி 90 முதல் 120 க்குள் இருக்க வேண்டும் என்பது முன்னோடி ஆய்வாளரின் கருத்தாகும்.

இயேசுவின் சீடராக இருந்த யோவானுக்கு இயேசு சிலுவையில் அறையப்படும் போது சுமார் 25 வயது என்று வைத்துக் கொண்டால் கூட கிபி 90ல் 115 வயது ஆகி இருக்கும். 115 வயது வரை மனிதனின் சராசரி வயது இல்லை. வேறு சிலர் கூறுவது போல் கிபி 65 முதல் 85 க்குள் எழுதியதாக வைத்துக் கொண்டாலும் அப்போதும் யோவான் தொண்ணூறு வயது முதல் 119 வயதில் இதை எழுதியதாக ஆகும். இதுவும் மனிதர்களின் சராசரி வயதுக்கு அதிகமாகும். எனவே இதை யோவான் என்ற சீடர் எழுதி இருக்க முடியாது என்பதில் சந்தேகம் இல்லை. இதை யோவான் என்ற பெயர் கொண்ட வேறொருவர் தான் எழுதி இருக்கிறார்.

விக்கி பீடியா இது பற்றி பின்வருமாறு கூறுகிறது.

இந்நற்செய்தியில் இயேசுவின் பிரியமான சீடரால் எழுதப்பட்டது எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. இயேசுவின் பிரியமான சீடர் என அழைக்கப்பட்டவர் அப்போஸ்தலரான யோவான் என்பது சம்பிரதாயமான வழக்கமாகும். யோவான் நற்செய்தி கிறிஸ்தவ விவிலியத்திலுள்ள நான்கு நற்செய்திகளில் கடைசியாக எழுதப்பட்டதாகும்.

யோவான் நற்செய்தியானது வேறு நபர்களால் எழுதப்பட்டதென பல ஆய்வாளர் கூறியிருக்கின்றனர். எனினும் றேமன் கே. ஜுசினோ (தஹம்ர்ய் ஃ. ஓன்ள்ண்ய்ர்) என்பவரால் 1998 இல் மொழியப்பட்ட தத்துவம் மிகவும் மிகப் பிரசித்தமானதும், சர்ச்சைக்குரியதுமாகும். இவர் யோவான் நற்செய்தி மர்தலேன் மரியாளால்

எழுதப்பட்டது என்ற வாதத்தை முன் வைத்தார். இயேசுவால் மரணத்திலிருந்து உயிர்ப்பிக்கப்பட்டதாக விவிலியத்தில் கூறப்பட்டுள்ள இலாசரஸ் இந்நூலை எழுதினார் என்பதுவும் இன்னுமொரு வாதமாகும்.

இது கி.பி. 65-85 இடையான காலப் பகுதியில் எழுதப்பட்டதாக மிதவாத ஆய்வாளரின் கருத்தாகும். எனினும் இது கி.பி. 90-120 இடயிலேயே எழுதப்பட்டது என்பதே முன்னோடி ஆய்வளரின் கருத்தாகும்.

மத்தேயு, மாற்கு, லூக்கா, யோவான் ஆகிய நால்வரும் இயேசுவுடன் இருந்தவர்கள் அல்லர். தாம் நேரடியாகக் கண்டதன் அடிப்படையில் சுவிஷேசங்களை எழுதியவர்களும் அல்லர். மாறாக மற்றவர்கள் சொன்னதைக் கேட்டு எழுதியவர்கள் தான் என்பதை முதலில் கவனத்தில் கொள்ள வேண்டும். கேள்விப்பட்டு எழுதியவைகளில் சரியான தகவல்களுடன் தவறான தகவல்களும் கலந்திருக்கும் என்பதைச் சொல்லத் தேவை இல்லை.

இதனால் தான் இயேசு சிலுவையில் அறையப்படுவது பற்றி நால்வரும் பல விஷயங்களில் முரண்பட்டு அறிவிக்கின்றனர். இது பின்னர் விரிவாக விளக்கப்படும்.

ஆனால் இவர்கள் எழுதிய சுவிஷேசங்களில் கூட கிறித்தவர்களின் இன்றைய கொள்கை காணப்படவில்லை.

ஆதாம் பாவம் செய்ததால் மனிதர்கள் அனைவரும் பாவிகளாகப் பிறக்கிறார்கள் என்றோ, அந்தப் பாவத்துக்குப் பரிகாரமாக இயேசு தன்னுயிரைப் பலி கொடுத்து அனைவரின் பாவங்களையும் சுமந்து கொண்டார்கள் என்றோ இயேசு கூறியதாக இந்த நான்கு சுவிஷேசங்களில் ஒரு இடத்தில் கூட குறிப்பிடப்படவில்லை.

## யார் இந்த பவுல்

நான்கு சுவிஷேசங்களைத் தொடர்ந்து மேலும் 23 அதிகாரங்கள் பைபிளில் உள்ளன. இவை அனைத்தும் பவுல் என்பவர் தனது சீடர்களுக்கும், திருச்சபைகளுக்கும் எழுதிய கடிதங்களாகும்.

இந்த பவுல் எழுதிய மடல்களில் தான் சிலுவைக் கொள்கையை பவுல் தானே உருவாக்கி அறிமுகப்படுத்துகிறார். இதற்கான ஆதாரங்களைப் பார்ப்பதற்கு முன் பவுல் என்பவர் யார் என்பதை முதலில் அறிந்து கொள்வது அவசியம்.

பவுல் என்பவரின் உண்மையான பெயர் சவுல் என்பதாகும். இவர் கிறித்தவ மக்களைக் கொடுமைப்படுத்தியதிலும், கொன்று குவித்ததிலும் முக்கியப் பங்காற்றியவர். இயேசு போதித்த ஒரு கடவுள் கொள்கையை அவரால் ஒழித்துக் கட்ட முடியவில்லை. எனவே தன்னைக் கிறித்துவ மதத்தில் இணைத்துக் கொண்டு மூன்று கடவுள் கொள்கையை இயேசுவின் பெயரைப் பயன்படுத்தி நுழைத்து அதில் வெற்றியும் பெற்றார்.

இதை பவுலே வாக்கு மூலமாகத் தருகிறார்.

முன்னே நானும் நசரேயனாகிய இயேசுவின் நாமத்திற்கு விரோதமாய் அநேக காரியங்களை நடப்பிக்க வேண்டுமென்று நினைத்திருந்தேன். அப்படியே நான் எருசலேமிலும் செய்தேன். நான் பிரதான ஆசாரியர்களிடத்தில் அதகாரம் பெற்று பரிசுத்தவான்களில் அநேகரைச் சிறைச்சாலைகளில் அடைத்தேன். அவர்கள் கொலை செய்யப்படுகையில் நானும் சம்மதித்திருந்தேன். சகல ஜெப ஆலயங்களிலும் நான் அவர்களை அநேகந்தரம் தண்டித்து தேவதுஷணஞ் சொல்லக் கட்டாயப்படுத்தினேன். அவர்கள் பேரில் மூர்க்கவெறி கொண்டவனாய் அந்நியப் பட்டணங்கள் வரைக்கும் அவர்களைத் துன்பப்படுத்தினேன். இப்படிச் செய்து வருகையில் நான் பிரதான ஆசாரியர்களிடத்தில் அதகாரமும் உத்தரவும் பெற்று தமஸ்குவுக்குப் போகும் போது மத்தியான வேளையில் ராஜாவே! நான் வழியிலே சூரியனுடைய பிரகாசத்திலும் அதிகமான ஒளி வானத்திலிருந்து என்னையும் என்னுடனே

கூடப் பிரயாணம் பண்ணினவர்களையும் சுற்றிப் பிரகாசிக்கக் கண்டேன். நாங்களெல்லாரும் தரையிலே விழுந்த போது: சவுலே சவுலே நீ ஏன் என்னைத் துன்பப்படுத்துகிறாய். முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடினமாமென்று எபிரெயு பாஷையிலே என்னுடனே சொல்லுகிற ஒரு சத்தத்தைக் கேட்டேன். அப்பொழுது நான்: ஆண்டவரே நீர் யார் என்றேன். அதற்கு அவர்: நீ துன்பப்படுத்துகிற இயேசு நானே.

அப்போஸ்தலர் 26:9-15

சவுல் வீடுகள் தோறும் நுழைந்து புருஷரையும் ஸ்திரீகளையும் இழுத்துக் கொண்டு போய் காவலில் போடுவித்து சபையைப் பாழாக்கிக் கொண்டிருந்தான்.

அப்போஸ்தலர் 8:3

சவுல் என்பவன் இன்னுங் கர்த்தருடைய சீஷரைப் பயமுறுத்திக் கொலை செய்யும்படி சீறிப் பிரதான ஆசாரியரிடத்திற்குப் போய்; . இந்த மார்க்கத்தாராகிய புருஷரையாகிலும் ஸ்திரீகளையாகிலும் தான் கண்டுபிடித்தால் அவர்களைக் கட்டி எருசலேமுக்குக் கொண்டு வரும்படி தமஸ்குவிலுள்ள ஜெபஆலயங்களுக்கு நிருபங்களைக் கேட்டு வாங்கினான். அவன் பிரயாணமாய்ப் போய் தமஸ்குவுக்குச் சமீபித்த போது சடிதியிலே வானத்திலிருந்து ஒரு ஒளி அவனைச் சுற்றிப் பிரகாசித்தது; அவன் தரையிலே விழுந்தான். அப்பொழுது: சவுலே சவுலே நீ என்னை ஏன் துன்பப்படுத்துகிறாய் என்று தன்னுடனே சொல்லுகிற ஒரு சத்தத்தைக் கேட்டான். அதற்கு அவன்: ஆண்டவரே நீர் யார் என்றான். அதற்குக் கர்த்தர்: நீ துன்பப்படுத்துகிற இயேசு நானே; முள்ளில் உதைக்கிறது உனக்குக் கடினமாம் என்றார்.

அப்போஸ்தலர் 9:1-6

இயேசு எனக்குத் தரிசனம் தந்தார் என்று கூறி மக்களை நம்ப வைத்த பவுல் இயேசுவைப் புகழ்வதாகக் கூறிக் கொண்டே இயேசுவின் கொள்கையைக் குழி தோண்டிப் புதைத்தார்.

**தன்னைப் பொய்யன் என்று தானே வாக்கு மூலமும் கொடுத்தார் பவுல்.**

நான் ஒருவருக்கும் அடிமைப்படாதவனாயிருந்தும் நான் அதிக ஜனங்களை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்கு என்னைத் தானே எல்லாருக்கும் அடிமையாக்கினேன். யூதரை ஆதாயப்படுத்திக் கொள்ளும் படிக்கு யூதருக்கு யூதனைப் போலவும் நியாயப் பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டவர்களை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்கு நியாயப் பிரமாணத்துக்குக் கீழ்ப்பட்டவனைப் போலவுமானேன். நியாயப் பிரமாணமில்லாதவர் களை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்கு அவர்களுக்கு நியாயப் பிரமாணம் இல்லாதவனைப் போலவுமானேன். அப்படியிருந்தும் நான் தேவனுக்கு முன்பாக நியாயப் பிரமாணமில்லாதவனாயிராமல் கிறிஸ்துவின் பிரமாணத்துக்குள்ளானவனா யிருக்கிறேன். பலவீனரை ஆதாயப்படுத்திக் கொள்ளும்படிக்குப் பலவீனருக்குப் பலவீனனைப் போலானேன்; எப்படியாகிலும் சிலரை இரட்சிக்கும்படிக்கு நான் எல்லாருக்கும் எல்லாமானேன். சுவிசேஷத்தில் நான் உடன்பங்காளியாகும் படிக்கு அதினிமித்தமே இப்படிச் செய்கிறேன்.

1கொரிந்தியர்-9:19-23

அவர்கள் எபிரெயரா? நானும் எபிரெயன். அவர்கள் இஸ்ரவேலரா? நானும் இஸ்ரவேலன். அவர்கள் ஆபிரகாமின் சந்ததியாரா? நானும் ஆபிராகாமின் சந்ததியான்.

2கொரிந்தியர் 11:22

நான் ஆளுக்குத் தகுந்த மாதிரி நடித்து ஏமாற்றுபவன் என்று பவுலே ஒப்புக் கொண்ட பின் அவர் உருவாக்கிய கொள்கையை இயேசுவின் கொள்கை என்று கிறித்தவ மக்கள் நம்புவது தான் ஆச்சரியமாக உள்ளது.

மத்தேயு, மாற்கு, யோவான், லூக்கா ஆகிய நான்கு பேர் சுவிஷேசங்களை எழுதினார்கள். அது போல் சுவிஷேசத்தில் பங்காளியாவதற்காகவே புதுக் கொள்கையை உண்டாக்கியதாகவும் பவுல் ஒப்புக் கொள்கிறார்.

இன்னும் அவர் சொல்வதைக் கேளுங்கள்!

நான் மனுஷர் பேசுகிற பிரகாரமாய்ப் பேசுகிறேன்; நம்முடைய அநீதி தேவனுடைய நீதியை விளங்கப் பண்ணினால் என்ன சொல்லுவோம்? கோபாக்கினையைச் செலுத்துகிற தேவன் அநீதராயிருக்கிறார் என்று சொல்லலாமா? அப்படிச் சொல்லக் கூடாது; சொல்லக் கூடுமானால் தேவன் உலகத்தை நியாயந்தீர்ப்பதெப்படி? அன்றியும் என் பொய்யினாலே தேவனுடைய சத்தியம் அவருக்கு மகிமையுண்டாக விளங்கினதுண்டானால் இனி நான் பாவியென்று தீர்க்கப்படுவானேன்? நன்மை வரும்படிக்குத் தீமை செய்வோமாக என்றும் சொல்லலாமல்லவா? நாங்கள் அப்படிப் போதிக்கிறவர்களென்றும் சிலர் எங்களைத் தூஷித்துச் சொல்லுகிறார்களே; அப்படிப் போதிக்கிறவர்கள் மேல் வரும் ஆக்கினை நீதியாயிருக்கும்.

ரோமர் 3:5-8

இயேசுவுக்குச் சம்மந்தமில்லாத இக்கொள்கையைக் கிறித்தவர்கள் மத்தியில் இவர் பிரச்சாரம் செய்த போது பவுல் கூறுவது பொய் என்று மக்கள் தூஷித்துத் தூற்றினார்கள். அதற்கு மறுப்புச் சொல்லப் புகுந்த பவுல் நான் பொய்யன் இல்லை என்றுதானே மறுக்க வேண்டும். அப்படி பவுல் மறுக்கவில்லை. மாறாக நான் பொய் தான் சொல்கிறேன்; ஆனாலும் அந்தப் பொய்யினால் தேவனுக்கு மகிமை ஏற்படுவதால் இந்தப் பொய்யான கொள்கையைச் சொல்வது தவறானது அல்ல என்பது தான் பவுலின் பதில். மேற்கண்ட வசனங்களில் இருந்து இதை அறிந்து கொள்ளலாம்.

இயேசுவின் கொள்கையைச் சொன்னால் மக்களிடம் எடுபடாது. இரத்தம் சிந்தியதை வைத்து ஒரு கொள்கையை உருவாக்கினால் அது நன்றாக எடுபடும்; அதிக மக்கள் சேருவார்கள் என்பதற்காகவே இந்தக் கொள்கையை பவுல் உண்டாக்கினார்.

இன்றும் கூட கிறித்தவ மத குருமார்கள் குருடர்கள் பார்க்கிறார்கள்; செவிடர்கள் கேட்கிறார்கள் என்று பொது இடங்களில் நாடகம் நடத்தி மக்களை

ஏமாற்றுவதற்குக் கடவுளுக்காக பொய் சொல்லலாம் என்ற பவுல் கொள்கையே காரணம்.

பவுல் கூறுவது வேதத்துக்கும் இயேசுவுக்கும் எதிரானது என்று பண்டிதர்கள் அன்றைக்கே கேள்வி கேட்டுள்ளனர். அதற்கு பவுல் சொல்லும் பதில் இது தான்.

எப்படியெனில் நான் செய்கிறது எனக்கே சம்மதியில்லை; நான் விரும்புகிறதைச் செய்யாமல் நான் வெறுக்கிறதையே செய்கிறேன்.

ரோமர் 7:15

எனக்கே விருப்பமில்லை தான்; ஆள் பிடிக்க வேண்டுமானால் இரத்ததைக் காட்டி பச்சாதாபம் தேடுவது தான் உதவும் என்பதற்காக எனக்கே விருப்பமில்லாத ஒன்றைப் பிரச்சாரம் செய்கிறேன் என்று ஒப்புக் கொள்கிறார்.

பின்பு அவன் போஜனம் பண்ணிப் பலப்பட்டான். சவுல் தமஸ்குவிலுள்ள சீஷருடனே சில நாள் இருந்து தாமதமின்றி கிறிஸ்து தேவனுடைய குமாரனென்று ஆலயங்களிலே பிரசங்கித்தான்.

அப்போஸ்தலர் 9:21

இயேசு மரணித்த பின் உயிர்த்தெழுந்தார் என்ற கொள்கையை உண்டாக்கியதே நான் தான் எனவும் தனது மகன் தீமேத்தயூவுக்கு எழுதிய அறிவுரையில் குறிப்பிடுகிறார் பவுல்.

தாவீதின் சந்ததியில் பிறந்த இயேசு கிறிஸ்து என் சுவிசேஷத்தின்படியே மரித்தோரிலிருந்தெழுப்பப் பட்டவரென்று நினைத்துக் கொள்.

இரண்டாம் தீமேத்தயூ 2:8

இயேசு மரித்து விட்டு உயிர்த்தெழுந்தார் என்பதை நான் தான் உருவாக்கினேன். இயேசுவுக்கும் இதற்கும் எந்தச் சம்மந்தமும் இல்லை என்று பவுல் தெள்ளத் தெளிவாக ஒப்புக் கொண்ட பிறகும் இயேசுவுக்குச் சம்மந்தமில்லாத இக்கொள்கையை கிறித்தவர்கள் நம்புவது ஆச்சரியமான விஷயமாக உள்ளது.

இன்னும் பவுல் சொல்வதைக் கேளுங்கள்

என் புத்தியீனத்தை நீங்கள் சற்றே சகித்தால் நலமாயிருக்கும்;. என்னைச் சகித்துமிருக்கிறீர்களே.

2கொரிந்தியர் 11:1

பின்னும் நான் சொல்லுகிறேன்;. ஒருவனும் என்னைப் புத்தியீனனென்று எண்ண வேண்டாம்;. அப்படி எண்ணினால் நானும் சற்றே மேன்மை பாராட்டும்படி என்னைப் புத்தியீனனைப் போலாகிலும் ஏற்றுக் கொள்ளுங்கள்.

2கொரிந்தியர் 11:16

அவர்கள் கிறிஸ்துவின் ஊழியக்காரரா? நான் அதிகம் புத்தியீனமாய்ப் பேசுகிறேன். நான் அதிகமாய்ப் பிரயாசப்பட்டவன். அதிகமாய் அடிபட்டவன் அதிகமாய்க் காவல்களில் வைக்கப்பட்டவன். அநேகந்தரம் மரண அவதியில் அகப்பட்டவன்.

2கொரிந்தியர் 11:23

ஒருவர் செய்த பாவத்துக்காக அவரது சந்ததிகள் பாவிகளாகப் பிறக்கிறார்கள் என்பதும், அந்தப் பாவத்துக்காக இயேசு தன்னைத் தானே சிலுவையில் பலியாக்கிக் கொண்டார் என்பதும் அறிவுக்குச் சம்மந்தமில்லாத கருத்து என்று பவுலுக்குத் தெரிகிறது. இப்படி ஒரு கருத்தைக் கூறுபவன் புத்தியீனன் அதாவது முட்டாள் என்பதும் அவருக்குப் புரிகிறது. ஆனாலும் எனக்கு முட்டாள் பட்டம் சூட்டினாலும் பரவாயில்லை; என் கருத்தை ஏற்றுக் கொள்ளு7ங்கள் என்று மன்றாடுவது மேற்கண்ட வசனங்களில் தெளிவாகத் தெரிகிறது.

உங்களுக்கு ஊழியம் செய்யும்படிக்கு மற்றச் சபைகளிடத்தில் சம்பளத்தைப் பெற்று அவர்களைக் கொள்ளையிட்டேன்.

2கொரிந்தியர் 11:8

யூதர்களிடம் சம்பளம் பெற்றுக் கொண்டு உங்களுக்கு ஊழியம் செய்தேன் என்று கூறுவதன் மூலம் இயேசுவின் கொள்கையை அழித்து ஒழிக்க இவரை யூதர்கள் சம்பளம் கொடுத்து நியமித்திருக்கிறார்கள் என்பது இதில் இருந்து தெரிகிறது. அல்லது யூதர்களிடம் சம்பளம் வாங்கிக் கொண்டு அவர்களுக்குத் துரோகம் செய்திருக்கிறார் என்று தெரிகிறது. இரண்டில் எது உண்மையானாலும் இவர் நம்பகமானவர் அல்ல. பொய்யும் புரட்டும் துரோகமும் தான் இவரது குனம் என்பது உறுதியாகிறது.

இத்தகைய ஒருவர் உருவாக்கிய கொள்கையை ஏற்று இயேசு போதித்த கொள்கையை விடுவது தான் இயேசுவுக்குச் செய்யும் மரியாதையா என்பதைக் கிறித்தவ அன்பர்கள் சிந்திக்க வேண்டும்.

ஒரே இறைவனை வணங்க வேண்டும்; அவனைத் தவிர வேறு யாரையும் வணங்கக் கூடாது என்று இயேசு போதித்திருக்க அதை ஒழித்துக் கட்டியதோடு பவுல் நின்று விடவில்லை. கர்த்தர் சொன்ன பல கோட்பாடுகளை இவர் துணிந்து மாற்றினார்.

சில உதாரணங்களைப் பார்ப்போம்

## விருத்த சேதனம்

ஆண்கள் கட்டாயம் விருத்த சேதனம் செய்ய வேண்டும் என்று வேதம் சொல்கிறது. இயேசுவும் விருத்த சேதனம் செய்யப்பட்டார். ஆனால் பவுல் அவசியம் இல்லை என்கிறார்.

எனக்கும் உங்களுக்கும் உனக்குப் பின்வரும் உன் சந்ததிக்கும் நடுவே உண்டாகிறதும் நீங்கள் கைக்கொள்ள வேண்டியதுமான என் உடன்படிக்கை என்னவென்றால் உங்களுக்குள் பிறக்கும் சகல ஆண்பிள்ளைகளும் விருத்தசேதனம் பண்ணப்பட வேண்டும்

ஆதியாகமம்-17:10

உங்கள் நுனித்தோலின் மாம்சத்தை விருத்தசேதனம் பண்ணக்கடவீர்கள். அது எனக்கும் உங்களுக்குமுள்ள உடன்படிக்கைக்கு அடையாளமாயிருக்கும்.

ஆதியாகமம்-17:11

எட்டாம் நாளிலே அந்தப் பிள்ளையினுடைய நுனித்தோலின் மாம்சம் விருத்த சேதனம் பண்ணப்படக் கடவது. உங்களில் தலைமுறை தலைமுறையாகப் பிறக்கும் ஆண்பிள்ளைகளெல்லாம் எட்டாம் நாளிலே விருத்தசேதனம் பண்ணப்பட வேண்டும்; வீட்டிலே பிறந்த பிள்ளையும் உன் வித்தல்லாத அந்நியனிடத்தில் பணத்திற்குக் கொள்ளப்பட்ட எந்தப் பிள்ளையும் அப்படியே விருத்தசேதனம் பண்ணப்பட வேண்டும்.

ஆதியாகமம்-17:12

உன் வீட்டிலே பிறந்த பிள்ளையும் உன் பணத்திற்குக் கொள்ளப்பட்டவனும் விருத்தசேதனம் பண்ண வேண்டியது அவசியம்; இப்படி என் உடன்படிக்கை உங்கள் மாம்சத்திலே நித்திய உடன்படிக்கையாக இருக்கக் கடவது.

ஆதியாகமம்-17:13

நுனித்தோலின் மாம்சம் விருத்தசேதனம் பண்ணப்படாதிருக்கிற நுனித்தோலுள்ள ஆண்பிள்ளையிருந்தால் அந்த ஆத்துமா என் உடன்படிக்கையை மீறினபடியால் தன் ஜனத்தில் இராதபடிக்கு அறுப்புண்டு போவான் என்றார்.

ஆதியாகமம்-17:14

எட்டாம் நாளிலே அந்தப் பிள்ளையினுடைய நுனித்தோலின் மாம்சம் விருத்தசேதனம் பண்ணப்படக் கடவது.

லேவியராகமம்-12:3

பிள்ளைக்கு விருத்தசேதனம் பண்ண வேண்டிய எட்டாம் நாளிலே அது கர்ப்பத்திலே உற்பவிக்கிறதற்கு முன்னே தேவதூதனால் சொல்லப்பட்டபடியே அதற்கு இயேசு என்று பேரிட்டார்கள்.

லூக்கா-2:21

விருத்த சேதனம் செய்வது கட்டாயக் கடமை எனவும் கடவுள் மனிதனுக்கு இட்ட கட்டளை எனவும், கடவுளிடம் மனிதன் செய்து கொண்ட ஒப்பந்தம் எனவும் தலை முறை தலைமுறையாக இது நடைமுறைப்படுத்த வேண்டியது எனவும், இது எக்காலத்திலும் மாற்றப்படக் கூடாது எனவும் வேதம் மிகத் தெளிவாகச் சொல்கிறது. மேலும் இயேசுவும் விருத்த சேதனம் செய்யப்பட்டார் எனவும் பைபிள் கூறுகிறது.

ஆனால் பவுல் சொல்வதைப் பாருங்கள்!

விருத்த சேதனமும் ஒன்றுமில்லை விருத்த சேதனமில்லாமையும் ஒன்றுமில்லை; தேவனுடைய கற்பனைகளைக் கைக்கொள்ளுகிறதே காரியம்.

1-கொரிந்தியர் 7:19

இதோ நீங்கள் விருத்த சேதனம் பண்ணிக் கொண்டால் கிறிஸ்துவினால் உங்களுக்கு ஒரு பிரயோஜனமுமிராது என்று பவுலாகிய நான் உங்களுக்குச் சொல்லுகிறேன்.

கலாத்தியர் 5:2

இயேசு சொன்னதையும் கடவுள் சொன்னதையும் கேட்காமல் என் சொல்லைக் கேளுங்கள் என்று கூறும் ஒருவர் வகுத்த கொள்கை எப்படி நம்பகமானதாக இருக்கும் என்பதையும் கிறித்தவ அன்பர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

## இஸ்ரவேலருக்கு மட்டும்

இயேசுவும் இன்னும் பல தீர்க்கதரிசிகளும் தத்தமது இனத்துக்காக அனுப்பப்பட்டனர். இயேசு அனுப்பப்பட்டது உலக மக்களுக்காக அல்ல. இஸ்ரவேல் என்ற ஒரு இனத்துக்காகவே அனுப்பப்பட்டார். ஆனால் அதை மீறி அதை எதிர்த்து இஸ்ரவேல் அல்லாதவர்களுக்கும் நான் பிரச்சாரம் செய்வேன் என்று பவுல் மாற்றம் செய்தார். இயேசுவின் போதனைக்கு மதிப்பில்லாமல் ஆக்கினார்.

அப்பொழுது அந்தத் திசைகளில் குடியிருக்கிற கானானிய ஸ்திரீ ஒருத்தி அவரிடத்தில் வந்து: ஆண்டவரே தாவீதின் குமாரனே எனக்கு இரங்கும் என் மகள் பிசாசினால் கொடிய வேதனைப்படுகிறாள் என்று சொல்லிக் கூப்பிட்டாள். அவளுக்குப் பிரதியுத்தரமாக அவர் ஒரு வார்த்தையும் சொல்லவில்லை. அப்பொழுது அவருடைய சீஷர்கள் வந்து: இவள் நம்மைப் பின்தொடர்ந்து கூப்பிடுகிறாளே இவளை அனுப்பிவிடும் என்று அவரை வேண்டிக் கொண்டார்கள். அதற்கு அவர்: காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்கு அனுப்பப்பட்டேனேயன்றி மற்றப்படியல்ல வென்றார். அவள் வந்து: ஆண்டவரே எனக்கு உதவி செய்யும் என்று அவரைப் பணிந்து கொண்டாள். அவர் அவளை நோக்கி: பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து நாய்க்குட்டிகளுக்குப் போடுகிறது நல்லதல்ல என்றார். அதற்கு அவள்: மெய் தான் ஆண்டவரே ஆகிலும் நாய்க்குட்டிகள் தங்கள் எஜமான்களின் மேஜையிலிருந்து விழும் துணிக்கைகளைத் தின்னுமே என்றாள். இயேசு அவளுக்குப் பிரதியுத்தரமாக: ஸ்திரீயே உன் விசுவாசம் பெரிது; நீ விரும்புகிறபடி உனக்கு ஆகக்கடவது என்றார். அந்நேரமே அவள் மகள் ஆரோக்கியமானாள்.

மத்தேயு 15:22-28

இஸ்ரவேலர்களுக்குப் பிரச்சாரம் செய்யும் அதிகாரம் மட்டுமே தனக்கு உள்ளது என்றும் மற்றவர்களுக்கு அல்ல என்றும் இயேசு கூறியதை மத்தேயு கூறுவது போலவே மற்ற மூன்று சுவிஷேசங்களும் கூறுகின்றன.

இயேசு தனது சீடர்களுக்கும் இதையே கட்டளையாகப் பிறப்பித்தார். இஸ்ரவேல் இனத்தில் இருந்த பன்னிரண்டு கோத்திரத்தாருக்கு மட்டும் பிரச்சாரம் செய்யுமாறு தான் கட்டளையிட்டார்.

நீங்கள் என் ராஜ்யத்திலே என் பந்தியில் போஜனபானம் பண்ணி இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களையும் நியாயந்தீர்க்கிறவர்களாய்ச் சிங்காசனங்களின் மேல் உட்காருவீர்கள் என்றார்.

லூக்கா- 22:30

அதற்கு இயேசு: மறு ஜென்ம காலத்திலே மனுஷகுமாரன் தம்முடைய மகிமையுள்ள சிங்காசனத்தின் மேல் வீற்றிருக்கும் போது என்னைப் பின்பற்றின நீங்களும் இஸ்ரவேலின் பன்னிரண்டு கோத்திரங்களையும் நியாயந்தீர்க்கிறவர்களாகப் பன்னிரண்டு சிங்காசனங்களின் மேல் வீற்றிருப்பீர்கள் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்.

மத்தேயு 19:28

காணாமற்போன ஆடுகளாகிய இஸ்ரவேல் வீட்டாரிடத்திற்குப் போங்கள்.

மத்தேயு 10:6

இஸ்ரவேல் அல்லாத மக்களுக்கு கிறித்தவக் கொள்கையைப் பிரச்சாரம் செய்யக் கூடாது என்று இயேசு சொல்லி இருக்க அவரது சீடர்களும் அவ்வாறே வழி நடந்திருக்க பவுல் தான் இதையும் மாற்றியதாக வாக்கு மூலம் தருகிறார்.

அதனடிப்படையில் தான் பாதிரிகளும் செயல்பட்டு வருகின்றனர்.

அப்பொழுது பவுலும் பர்னபாவும் தைரியங்கொண்டு அவர்களை நோக்கி: முதலாவது உங்களுக்கே தேவ வசனத்தைச் சொல்ல வேண்டியதாயிருந்தது; நீங்களோ அதைத் தள்ளி உங்களை நித்தியஜீவனுக்கு அபாத்திரராகத் தீர்த்துக் கொள்ளுகிறபடியினால் இதோ நாங்கள் புற ஜாதியாரிடத்தில் போகிறோம்.

அப்போஸ்தலர் நடபடிகள் 13:46

இஸ்ரவேல் மக்கள் தவிர மற்றவர்களுக்கு தனது கொள்கையைப் பிரச்சாரம் செய்வதை அடியோடு இயேசு மறுத்திருக்கும் போது, இஸ்ரவேலர்கள் ஆடுகள் எனவும், மற்ற சாதியினர் நாய்கள் எனவும் கூறி இருக்கும் போது இயேசுவின் வழிகாட்டுதலை மீறுவது எப்படி கிறித்தவமாகும்? இது எப்படி இயேசுவை மதித்ததாக ஆகும்?

## ஒரே கடவுள் என்ற கொள்கையும் முக்கடவுள் கொள்கையும்

இயேசுவும் அவருக்கு முன்னர் அனுப்பப்பட்ட தீர்க்கதரிசிகளும் கடவுள் ஒரே ஒருவர் தான் என்ற கொள்கையைப் போதித்தனர். இந்தக் கொள்கையைக் குழி தோண்டிப் புதைத்தவரும் பவுலடிகள் தான். கடவுள் குறித்து கடவுள் கூறுவதையும் இயேசு உள்ளிட்ட தீர்க்கதரிசிகள் கூறுவதையும் சிந்தியுங்கள். பவுல் உண்டாக்கிய இன்றைய போலிக் கிறித்தவத்துக்கும் அதற்கும் ஏதாவது சம்மந்தம் இருக்கிறதா என்றும் சிந்தித்துப் பாருங்கள்!

ஆகையால் உயர வானத்திலும், தாழ பூமியிலும் கர்த்தரே தேவன். அவரைத் தவிர ஒருவரும் இல்லை என்பதை நீ இந்நாளில் அறிந்து, உன் மனதிலே சிந்தித்து

உபகாமம் 4:39

இஸ்ரவேலே கேள்! நம்முடைய தேவனாகிய கர்த்தர் ஒருவரே கர்த்தர். நீ உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்துமாவோடும், உன் முழுப் பலத்தோடும் அன்பு கூருவாயாக. இன்று நான் உனக்குக் கட்டளையிடுகிற இந்த வார்த்தைகள் உன் இருதயத்தில் இருக்கக் கடவது. நீ அவைகளை உன் பிள்ளைகளுக்குக் கருத்தாய்ப் போதித்து, நீ உன் வீட்டில் உட்கார்ந்திருக்கிற போதும், வழியில் நடக்கிற போதும், படுத்துக் கொள்கிற போதும், எழுந்திருக்கிற போதும் அவைகளைக் குறித்துப் பேசி

உபாகமம் 6:4-7

நான் முந்தினவரும், நான் பிந்தினவருந்தானே, என்னைத் தவிர தேவன் இல்லையென்று இஸ்ரவேலின் ராஜாவாகிய கர்த்தரும் சேனைகளின் கர்த்தராகிய அவனுடைய மீட்பரும் சொல்லுகிறார்.

ஏசாயா 44:6

எனக்கு முன் ஏற்பட்ட தேவன் இல்லை. எனக்குப் பின் இருப்பதுமில்லை. நான், நானே கர்த்தர். என்னையல்லாமல் ரட்சகர் இல்லை. நானே அறிவித்து

இரட்சித்து, விளங்கப் பண்ணினேன். உங்களில் இப்படிச் செய்யத்தக்க அந்நிய தேவன் இல்லை. நானே என்பதற்கு நீங்கள் எனக்குச் சாட்சிகள் என்று கர்த்தர் சொல்லுகிறார்.

ஏசாயா 43:10-12

வானங்களைச் சிருஷ்டித்துப் பூமியையும் வெறுமையாயிருக்கச் சிருஷ்டியாமல் அதைக் குடியிருப்புக்காகச் செய்து படைத்து, அதை உருவேற்படுத்தின தேவனாகிய கர்த்தர் சொல்லுகிறதாவது: நானே கர்த்தர், வேறொருவர் இல்லை.

ஏசாயா 45:18

நானே கர்த்தர். வேறொருவர் இல்லை. என்னைத் தவிர தேவன் இல்லை. என்னைத் தவிர ஒருவரும் இல்லையென்று சூரியன் உதிக்கிற திசையிலும், அது அஸ்தமிக்கிற திசையிலும் அறியப்படும்படிக்கு நீ என்னை அறியாதிருந்தும், நான் உனக்கு இடைக்கட்டு கட்டினேன். நானே கர்த்தர், வேறொருவர் இல்லை.

ஏசாயா 45:5,6

நானே தேவன். வேறொருவரும் இல்லை. நானே தேவன். எனக்குச் சமானமில்லை. அந்தத்திலுள்ளவைகளை ஆதி முதற்கொண்டும், இன்னும் செய்யப்படாதவைகளைப் பூர்வகால முதற் கொண்டும் அறிவிக்கிறேன்; என் ஆலோசனை நிலை நிற்கும், எனக்குச் சித்தமானவைகளையெல்லாம் செய்வேன் என்று சொல்லி

ஏசாயா 46:9,10

என்னையன்றி உனக்கு வேறு தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம்.

யாத்திராகமம் 20:3

கர்த்தரே தேவன். அவரையல்லாமல் வேறொருவரும் இல்லை என்பதை நீ அறியும்படிக்கு இது உனக்குக் காட்டப்பட்டது.

உபாகமம் 4:35

இஸ்ரவேலே கேள்! நம்முடைய தேவனாகிய கர்த்தர் ஒருவரே கர்த்தர். நீ உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும், உன் முழு ஆத்மாவோடும் உன் முழுப் பலத்தோடும் அன்பு கூருவாயாக! இன்று நான் உனக்குக் கட்டளையிடுகிற இந்த வார்த்தைகள் உன் இருதயத்தில் இருக்கக் கடவது.

உபாகமம் 6:4-6

நானே தேவன்; வேறொருவரும் இல்லை; நானே தேவன்; எனக்குச் சமானமில்லை

ஏசாயா 46:9

என்று கர்த்தர் கூறினார்.

நானும் கடவுள் என்று கர்த்தர் கூறினால் இயேசுவையும் கடவுள் என்று கிறித்தவர்கள் நம்புவதில் நியாயமிருக்கும்.

நானே - நான் மட்டுமே - கடவுள் என்ற பைபிளின் இவ்வசனங்கள் இயேசு உள்ளிட்ட எவரும் கடவுளாக முடியாது என்பதைக் கூறுகின்றது.

எனக்கு இணையில்லை; நிகரில்லை என்ற சொற்கள் இன்னும் இதை அழுத்தமாகக் கூறுகிறது. இதற்கு முரணாக இறைமகன் என்ற சொல்லுக்கு விளக்கம் தருவது பைபிளுக்கே முரணாகத் தோன்றவில்லையா?

அப்பொழுது இயேசு: அப்பாலே போ சாத்தானே! உன் தேவனாகிய கர்த்தரைப் பணிந்து கொண்டு, அவர் ஒருவருக்கே ஆராதனை செய்வாயாக என்று எழுதியிருக்கிறதே என்றார்.

மத்தேயு 4:10

ஒரு கடவுளைத் தவிர மற்றவர்களை வணங்குவோர் சாத்தான்கள் என்பது இயேசுவின் இந்த வார்த்தையிலிருந்து தெரிகின்றது.

இரண்டு எஜமான்களுக்கு ஊழியஞ் செய்ய ஒருவனாலும் கூடாது. ஒருவனைப் பகைத்து மற்றவனைச் சிநேகிப்பான்; அல்லது ஒருவனைப் பற்றிக் கொண்டு மற்றவனை அசட்டை பண்ணுவான்

மத்தேயு 6:24

இரண்டு எஜமானர்களுக்கே ஊழியஞ் செய்ய முடியாது என்று இயேசு கூறியிருக்க கிறித்தவர்கள் இரண்டு அல்லது மூன்று கடவுள்களுக்கு உழியஞ்செய்ய முடியும் என்று நம்பலாமா?

பரலோகத்திலிருக்கிற என் பிதாவின் சித்தப்படி செய்கிறவனே பரலோக ராஜ்ஜியத்தில் பிரவேசிப்பானேயல்லாமல், என்னை நோக்கி கர்த்தாவே! கர்த்தாவே! என்று சொல்லுகிறவன் அதில் பிரவேசிப்பதில்லை. அந்நாளில் அநேகர் என்னை நோக்கி: கர்த்தாவே! கர்த்தாவே! உமது நாமத்தினாலே தீர்க்கதரிசனம் உரைத்தோம் அல்லவா? உமது நாமத்தினாலே பிசாசுகளைத் துரத்தினோம் அல்லவா? உமது நாமத்தினாலே அநேக அற்புதங்களைச் செய்தோம் அல்லவா? என்பார்கள். அப்பொழுது நான் ஒருகாலும் உங்களை அறியவில்லை; அக்கிரமச் செய்கைக்காரரே என்னை விட்டு அகன்று போங்கள் என்று அவர்களுக்குச் சொல்லுவேன். ஆகையால் நான் சொல்லிய இந்த வார்த்தைகளைக் கேட்டு இவைகளின் படி செய்கிறவன் எவனோ அவனே கன்மலையின் மேல் தன் வீட்டைக் கட்டின புத்தியுள்ள மனுஷனுக்கு ஒப்பாவான். பெரு மழை சொரிந்து, பெரு வெள்ளம் வந்து, காற்று அடித்து, அந்த வீட்டின் மேல் மோதியும், அது விழவில்லை; ஏனென்றால், அது கன்மலையின் மேல் அஸ்திபாரம் போடப்பட்டிருந்தது. நான் சொல்லிய இந்த வார்த்தைகளைக் கேட்டு இவைகளின் படி செய்யாதிருக்கிறவன் எவனோ அவன் தன் வீட்டை மணலின் மேல் கட்டின புத்தியில்லாத மனுஷனுக்கு ஒப்பிடப்படுவான். பெரு மழை சொரிந்து, பெரு வெள்ளம் வந்து, காற்று அடித்து, அந்த வீட்டின் மேல் மோதின போது அது விழுந்தது; விழுந்து முழுவதும் அழிந்தது என்றார்.

மத்தேயு 7:21-27

மூடர்களுக்கும் விளங்கும் வகையில் இயேசு செய்த இந்த போதனையைக் கிறித்தவர்கள் சிந்திக்க மாட்டார்களா? இயேசுவே என்றழைத்து அவரைக் கடவுளாக்கியதன் மூலம் பரலோக ராஜ்ஜியத்தில் பிரவேசிக்க இயலாமல் போவதைத் தான் அவர்கள் விரும்புகிறார்களா?

குருடர்கள் பார்க்கிறார்கள்; செவிடர் கேட்கிறார்கள் என்று கூறி இயேசுவைக் கடவுளாக்குவோர் அக்கிரமக்காரர்கள் என்றும், ஏமாற்றுக்காரர்கள் என்றும் இயேசு முன்கூட்டியே எச்சரிக்கை செய்திருப்பதை அவர்கள் உணர மாட்டார்களா?

ஒரே கடவுளாகிய கர்த்தரை - கர்த்தரை மட்டுமே - வணங்கி, வழிபட்டு கற்பாறையின் மீது தங்கள் கட்டிடத்தை எழுப்ப வேண்டாமா? ஆண்டவரே! என்று இயேசுவை அழைத்து மணல் மீது வீடு கட்டுவது மதியீனமாக அவர்களுக்குத் தோன்றவில்லையா?

தங்களின் பெற்றோர்களும் தங்களின் மதகுருமார்களும் இயேசுவைப் பற்றியும் அவர் போதித்த இலட்சியம் பற்றியும் தவறாகத் தங்களுக்குப் போதித்துத் திசை திருப்பி விட்டனர் என்பது இந்த வசனங்களிலிருந்து கிறித்தவர்களுக்கு உண்மையாகவே தெரியவில்லையா? சிந்தித்துப் பாருங்கள்.

அந்த நாளையும், அந்த நாழிகைகயையும் பிதா ஒருவர் தவிர மற்றொருவனும் அறியான். பரலோகத்திலிருக்கிற தூதர்களும் அறியார்கள். குமாரனும் கூட அறியார்.

மத்தேயு 26:36

போதகரே! நியாயப் பிரமாணத்தில் எந்தக் கற்பனை பிரதானமானதென்று கேட்டான். இயேசு அவனை நோக்கி உன் தேவனாகிய கர்த்தரிடத்தில் உன் முழு இருதயத்தோடும் உன் முழு ஆத்துமாவோடும் உன் முழு மனத்தோடும் அன்பு கூருவாயாக. இது முதலாம் பிரதான கற்பனை.

மத்தேயு 22:36-38

இந்தப் பிரதானமான கொள்கை கிறித்தவர்களிடம் இன்றைக்கு இருக்கிறதா? பிரதானமான இந்தக் கொள்கையைக் கைவிட்டு விட்டு எந்த அடிப்படையில் தங்களைக் கிறித்தவர்கள் என்கிறார்கள்?

அப்பொழுது செபெதேயுவின் குமாரருடைய தாய் தன் குமாரரோடு கூட அவரிடத்தில் வந்து, அவரைப் பணிந்து கொண்டு, உம்மிடத்தில் ஒரு விண்ணப்பம் பண்ண வேண்டும் என்றாள். அவர் அவளை நோக்கி, உனக்கு என்ன வேண்டும் என்று கேட்டார். அதற்கு அவள் உம்முடைய ராஜ்யத்திலே என் குமாரராகிய இவ்விரண்டு பேரில் ஒருவன் உமது வலது பாரிசத்திலும், ஒருவன் இடது பாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும்படி அருள் செய்ய வேண்டும் என்றாள். இயேசு பிரதியுத்தரமாக: நீங்கள் கேட்டுக் கொள்கிறது இன்னது என்று உங்களுக்குத் தெரியவில்லை. நான் குடிக்கும் பாத்திரத்தில் நீங்கள் குடிக்கவும், நான் பெறும் ஸ்நானத்தை நீங்கள் பெறவும் உங்களால் கூடுமா? என்றார். அதற்கு அவர்கள் கூடும் என்றார்கள். அவர் அவர்களை நோக்கி, என் பாத்திரத்தில் நீங்கள் குடிப்பீர்கள், நான் பெறும் ஸ்நானத்தையும் நீங்கள் பெறுவீர்கள்; ஆனாலும், என் வலது பாரிசத்திலும் என் இடது பாரிசத்திலும் உட்கார்ந்திருக்கும்படி என் பிதாவினால் எவர்களுக்கு ஆயத்தம் பண்ணப் பட்டிருக்கிறதோ அவர்களுக்கேயல்லாமல், மற்றொருவருக்கும் அதை அருளுவது என் காரியமல்ல என்றார்.

மத்தேயு 20:20-23

ஒரே கடவுளை வணங்க வேண்டும் என்று மக்களுக்குப் போதிக்கவே இயேசு வந்திருக்கிறார். தம்மைக் கடவுள் என்று வாதிட வரவில்லை. சர்வ அதிகாரமும் ஏக இரட்சகனாகிய கர்த்தருக்கு மட்டுமே உரியது என்று போதிப்பதையே குறிக்கோளாகக் கொண்டிருந்தார் என்பதை இந்த வசனங்களிலிருந்து அறியலாம்.

இவற்றுக்கு முரணாக முக்கடவுள் கொள்கையை உருவாக்கியவர் பவுல் என்பதை அனைவரும் அறிவர். அவர் கூட தன்னையுமறியாமல் அந்த உண்மையை ஒப்புக் கொள்கிறார்.

ஒருவராய், சாவாமையுள்ளவரும், சேரக்கூடாத ஒளியில் வாசம் பண்ணுகிறவரும், மனுஷரில் ஒருவரும் கண்டிராதவரும், காணக்கூடாதவருமாயிருக்கிறார்; அவருக்கே கனமும் நித்திய வல்லமையும் உண்டாயிருப்பதாக. ஆமேன்.

தீமோத்தேயு 6:16

மேலும் இயேசு பல்வேறு சந்தர்ப்பங்களில் முழங்கிய கொள்கைப் பிரகடனத்தைப் பாருங்கள்! நான் கடவுளால் அனுப்பப்பட்ட தூதனே தவிர கடவுள் இல்லை என்று தெளிவுபடக் கூறுகிறார்.

என்னை அனுப்பினவர் சத்தியமுள்ளவர். நான் அவரிடத்தில் கேட்டவைகளையே உலகத்துக்குச் சொல்கிறேன் என்றார்.

யோவான் 8:26

நான் என் சுயமாய் ஒன்றும் செய்யாமல், என் பிதா எனக்குப் போதித்தபடியே இவைகளைச் சொன்னேன் என்றும் அறிவீர்கள்.

யோவான் 8:28

ஒன்றான மெய்த் தேவனாகிய உம்மையும், நீர் அனுப்பினவராகிய இயேசு கிறிஸ்துவையும் அறிவதே நித்திய ஜீவன். பூமியிலே நான் உம்மை மகிமைப்படுத்தினேன். நான் செய்யும் படி நீர் எனக்கு நியமித்த கிரியையைச் செய்து முடித்தேன்.

யோவான் 17:3,4

அந்த நாளையும், அந்த நாழிகையையும் பிதா ஒருவர் தவிர மற்றொருவனும் அறியான்; பரலோகத்திலுள்ள தூதர்களும் அறியார்கள்; குமாரனும் அறியார்.

மார்க்கு 13:32

இவை யாவும் புதிய ஏற்பாட்டின் நான்கு சுவிஷேசங்களும் கூறும் உண்மை.

இவைகளையெல்லாம் கிறித்தவர்கள் அலட்சியம் செய்தால் இந்த வேதத்தில் அவர்களுக்கே நம்பிக்கையில்லை என்பதைத் தவிர வேறு என்ன பொருள்? பரலோக ராஜ்ஜியத்தில், இந்தப் போதனைகளை மீறியதற்காக கர்த்தர் விசாரணை செய்தால் கிறித்தவர்கள் என்ன பதில் கூறுவார்கள்? சிந்தித்துப் பாருங்கள்!

ஆகாய மண்டலத்தில் கர்த்தருக்கு நிகரானவர் யார்? பலவான்களின் புத்திரரில் கர்த்தருக்கு ஒப்பானவர் யார்?

சங்கீதம் 89:6

ஆண்டவரே, தேவர்களுக்குள்ளே உமக்கு நிகருமில்லை; உம்முடைய கிரியைகளுக்கு ஒப்புமில்லை.

சங்கீதம் 86:8

நீர் ஒருவரே தேவன்.

சங்கசீதம் 86:10

நம்முடைய தேவனாகிய கர்த்தருக்குச் சமமானவர் யார்? அவர் வானத்திலும் பூமியிலுமுள்ளவைகளைப் பார்க்கும்படி தம்மைத் தாழ்த்துகிறார்.

சங்கீதம் 113:5,6

இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தாவே! மேலே வானத்திலும் கீழே பூமியிலும் உமக்கு ஒப்பான தேவன் இல்லை.

முதலாம் ராஜாக்கள் 8:23

அங்கே காணாமலும் கேளாமலும் சாப்பிடாமலும் முகராமலும் இருக்கிற மரமும் கல்லுமான, மனுஷர் கைவேலையாகிய தேவர்களைச் சேவிப்பீர்கள். அப்பொழுது அங்கேயிருந்து உன் தேவானகிய கர்த்தரைத் தேடுவாய்; உன் முழு இருதயத்தோடும் உன் முழு ஆத்துமாவோடும் அவரைத் தேடும் போது, அவரைக் கண்டடைவாய்.

(உபாகமம் 4:28-29)

தங்கள் விக்கிரகமாகிய மரத்தைச் சுமந்து இரட்சிக்க மாட்டாத தேவனைத் தொழுது கொள்ளுகிறவர்கள் அறிவில்லாதவர்கள். நீங்கள் தெரிவிக்கும்படி சேர்ந்து, ஏகமாய் யோசனை பண்ணுங்கள். இதைப் பூர்வ கால முதற்கொண்டு விளங்கப் பண்ணி, அந்நாள் துவக்கி இதை அறிவித்தவர் யார்? கர்த்தராகிய நான் அல்லவோ? நீதிபரரும் இரட்சகருமாகிய என்னையல்லாமல் வேறே தேவன் இல்லை; என்னைத் தவிர வேறொருவரும் இல்லை. பூமியின் எல்லையெங்குமுள்ளவர்களே! என்னை நோக்கிப் பாருங்கள்; அப்பொழுது இரட்சிக்கப்படுவீர்கள்; நானே தேவன், வேறொருவரும் இல்லை. முழங்கால் யாவும் எனக்கு முன்பாக முடங்கும். நாவு யாவும் என்னை முன்னிட்டு ஆணையிடும் என்று நான் என்னைக் கொண்டே ஆணையிட்டிருக்கிறேன். இந்த ரீதியான வார்த்தை என் வாயிலிருந்து புறப்பட்டது; இது மாறுவது இல்லையென்கிறார்.

ஏசாயா 45:20-23

விக்கிரகங்களை உருவாக்குகிற யாவரும் வீணார். அவர்களால் இச்சிக்கப்பட்டவைகள் ஒன்றுக்கும் உதவாது; அவைகள் ஒன்றும் காணாமலும், ஒன்றும் அறியாமலும் இருக்கிறதென்று தங்களுக்கு வெட்கமுண்டாக அவைகளுக்குத் தாங்களே சாட்சிகளாயிருக்கிறார்கள். ஒன்றுக்கும் உதவாத தெய்வத்தை உருவாக்கி, விக்கிரகத்தை வார்ப்பிக்கிறவன் எப்படிப்பட்டவன்? இதோ அவனுடைய கூட்டாளிகளெல்லாரும் வெட்கமடைவார்கள். தொழிலாளிகள் நரஜீவன்கள் தானே; அவர்கள் எல்லோரும் கூடி வந்து நிற்கட்டும்; அவர்கள் ஏகமாய்த் திகைத்து வெட்கப்படுவார்கள்.

ஏசாயா 44:9-11

இப்படியிருக்க, தேவனை யாருக்கு ஒப்பிடுவீர்கள்? எந்தச் சாயலை அவருக்கு ஒப்பிடுவீர்கள்? கன்னான் ஒரு சுரூபத்தை வார்க்கிறான். தட்டான் பொன் தகட்டால் அதை மூடி, அதற்கு வெள்ளிச்சங்கிலிகளைப் பொருந்தவைக்கிறான்

ஏசாயா 40:18,19

விக்கிரகங்களை நாடாமலும், வார்ப்பிக்கப்பட்ட தெய்வங்களை உங்களுக்கு உண்டாக்காமலும் இருப்பீர்களாக; நான் உங்கள் தேவனாகிய கர்த்தர்.

லேவியராகமம் 19:4

நீங்கள் உங்களுக்கு விக்கிரகங்களையும் சுரூபங்களையும் உண்டாக்காமலும், உங்களுக்குச் சிலை நிறுத்தாமலும், சித்திரந்தீர்ந்த கல்லை நமஸ்கரிக்கும் பொருட்டு உங்கள் தேசத்தில் வைக்காமலும் இருப்பீர்களாக; நான் உங்கள் தேவனாகிய கர்த்தர்.

லேவியராகமம் 26:1

உன்னை அடிமைத்தன வீடாகிய எகிப்து தேசத்திலிருந்து புறப்படப் பண்ணின உன் தேவனாகிய கர்த்தர் நானே. என்னையன்றி வேறே தேவர்கள் உண்டாயிருக்க வேண்டாம். மேலே வானத்திலும், கீழே பூமியிலும், பூமியின் கீழ்த் தண்ணீரிலும் உண்டாயிருக்கிறவைகளுக்கு ஒப்பான ஒரு சொரூபத்தையாகிலும் நீ உனக்கு உண்டாக்க வேண்டாம். நீ அவைகளை நமஸ்கரிக்கவும், சேவிக்கவும் வேண்டாம். உன் தேவனாகிய கர்த்தராயிருக்கிற நான் எரிச்சலுள்ள தேவனாயிருந்து, என்னைப் பகைக்கிறவர்களைக் குறித்து பிதாக்களுடைய அக்கிரமத்தைப் பிள்ளைகளிடத்தில் மூன்றாம் நான்காம் தலைமுறை மட்டும் விசாரிக்கிறவராயிருக்கிறேன்.

யாத்திராகமம் 20:2-5

நீ அவர்களுடைய தேவர்களைப் பணிந்து கொள்ளாமலும், சேவியாமலும் அவர்கள் செய்கைகளின் படி செய்யாமலும் அவர்களை நிர்மூலம் பண்ணி, அவர்களுடைய சிலைகளை உடைத்துப் போடுவாயாக. உங்கள் தேவனாகிய கர்த்தரையே சேவிக்கக் கடவீர்கள்!

யாத்திராகமம் 23:24,25

விக்கிரகத்தை உடைத்துப் போடுமாறு கடவுள் இட்ட கட்டளைக்கு தமது செயல் மாற்றமாக இருப்பது கிறித்தவ நண்பர்களுக்குத் தெரியவில்லையா? சிந்தித்துப் பார்க்க வேண்டாமா?

ஜனங்களின் வழிபாடுகள் வீணாயிருக்கிறது; காட்டில் ஒரு மரத்தை வெட்டுகிறார்கள். அது தச்சன் கையாடுகிற வாச்சியால் பணிப்படும். வெள்ளியினாலும் பொன்னினாலும் அதை அலங்கரித்து அது அசையாத படிக்கு அதை ஆணிகளாலும் சுத்திகளாலும் உறுதியாக்குகிறார்கள். அவைகள் பனையைப் போல நெட்டையாய் நிற்கிறது, அவைகள் பேச மாட்டாதவைகள், அவைகள் நடக்கமாட்டாததினால் சுமக்கப்பட வேண்டும். அவைகளுக்குப் பயப்பட வேண்டாம்; அவைகள் தீமை செய்யக் கூடாது, நன்மை செய்யவும் அவைகளுக்குச் சக்தி இல்லை என்று கர்த்தர் சொல்லுகிறார். கர்த்தாவே உமக்கு ஒப்பானவன் இல்லை; நீரே பெரியவர்; உமது நாமமே வல்லமையில் பெரியது.

ஏரேமியா 10:3-6

சிலுவையையும், இயேசுவையும், அவரது தாயாரையும் உருவங்களாக்கி அவற்றைக் கடவுள்கள் என்று எண்ணி வழிபட்டு, பைபிளின் இந்தப் போதனைகளைப் புறக்கணிப்போர் தங்களைக் கிறித்தவர்கள் என்று கூறிக் கொள்ள அருகதை உள்ளவர்கள் தாமா?

பைபிளைத் தூக்கி எறிந்து விட்டு தங்கள் பாதிரிமார்கள் கூறிய திரித்துவம் (முக்கடவுள் கொள்கை) எனும் கொள்கையை ஏற்கலாமா?

கர்த்தர் வகுத்தளித்த இந்த உன்னதமான கொள்கையை மாற்றி அமைத்து முக்கடவுள் கொள்கையை உருவாக்கியவர் பவுல் தான் என்பது தெளிவாகத் தெரிகிறது. இதையும் கிறித்தவ அன்பர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

## சிலுவைப் பலி

இனி சிலுவைப் பலி சம்மந்தமான பவுலின் கொள்கையை நாம் ஆராய்வோம்.

இதில் பல உட்பிரிவுகள் உள்ளன.

ஆதாம் பாவம் செய்தார். அதனால் அவரது வழித்தோன்றல்கள் பாவிகளாகப் பிறக்கிறார்கள்

பிறவிப் பாவமாகிய இப்பாவம் விலக வேண்டுமானால் மாபெரும் உயிர்ப் பலி கொடுக்க வேண்டும். எனவே இயேசு தானாக முன் வந்து மனிதர்களின் பாவத்தைச் சுமப்பதற்காகத் தன் உயிரை விட்டார்.

இயேசு நமது பாவத்தைச் சுமப்பதற்காக உயிரை விட்டார் என்பதை யார் நம்பி ஏற்றுக் கொள்கிறார்களோ அவர்களின் பிறவிப் பாவம் மன்னிக்கப்படும்

இவை சரியானவை தானா என்பதை ஒவ்வொன்றாக ஆராய்வோம்

## மன்னிக்கப்பட்ட ஆதாமின் பாவம்

ஆதாமும் ஏவாளும் கடவுளின் கட்டளையை மீறி தடுக்கப்பட்ட கனியைப் புசித்தார்கள். அதனால் அவர்கள் பாவிகளானார்கள் என்பதில் நமக்கு மறுப்பு இல்லை.

ஆதாம் செய்த இந்தப் பாவத்தில் உண்மையில் ஆதாமுக்குச் சம்மந்தம் இல்லை என்று கர்த்தர் கூறியதாக பைபிள் கூறுகிறது.

பின்பு தேவனாகிய கர்த்தர்: இதோ மனுஷன் நன்மை தீமை அறியத்தக்கவனாய் நம்மில் ஒருவரைப் போல் ஆனான்; இப்பொழுதும் அவன் தன் கையை நீட்டி ஜீவ விருட்சத்தின் கனியையும் பறித்து புசித்து என்றைக்கும் உயிரோடிராதபடிக்குச் செய்ய வேண்டும் என்று அவன் எடுக்கப்பட்ட மண்ணைப் பண்படுத்த தேவனாகிய கர்த்தர் அவனை ஏதேன் தோட்டத்திலிருந்து அனுப்பி விட்டார்.

ஆதியாகமம் 3:22,23

ஆதாம் என்றென்றைக்கும் உயிரோடு இருந்து விடக் கூடாது என்பதற்காகவும், மண்ணைப் பண்படுத்துவதற்காகவும் அவரைப் பூமிக்கு அனுப்ப வேண்டும் என்று கர்த்தரே திட்டமிட்டுக் கனியைப் புசிக்க வைத்ததாக பைபிள் கூறுகிறது.

மேலும் ஆதாம் நன்மை தீமையை அறியத் தக்கவராக ஆகி விட்டார் எனக் கர்த்தர் கூறியதாக மேற்கண்ட வசனம் கூறுகிறது.

நன்மை தீமையை அறியத் தக்க தகுதியை அடைந்து விட்ட ஆதாம், கர்த்தரின் கட்டளையை மீறியது தவறு என்பதையும் நிச்சயம் அறிவார். அதற்காக இறைவனிடம் அவர் மன்னிப்பும் கேட்டிருப்பார். ஆதாம் மன்னிப்புக் கேட்கவில்லை என்று நாம் முடிவு செய்தால் ஆதாம் நன்மை தீமையை அறிந்து கொண்டார் என்ற கர்த்தரின் கூற்றை மறுக்கும் நிலை ஏற்படும்.

பாவம் செய்வது எப்படி மனிதனின் இயல்பாக உள்ளதோ அது போல் பாவங்களை மன்னிப்பது கர்த்தரின் இயல்பாகும். கர்த்தரிடம் மன்னிப்புக்

கேட்டாலும் கர்த்தர் மன்னிக்க மாட்டார் என்று கருதுவது கர்த்தரின் இலக்கணத்துக்கு எதிரானதாகும்.

ஆதாம் பாவம் செய்தார் என்ற போதும் ஆதாமின் பாவத்தைக் கர்த்தர் மன்னித்து விட்ட பிறகு பிறவிப் பாவம் என்பதற்கு இடம் இல்லை.

கிறித்தவர்களின் கத்தோலிக்கப் பிரிவுக்கும் புரோட்டஸ்டண்ட் பிரிவுக்கும் தனித்தனியான பைபிள்கள் உள்ளன. கத்தோலிக்கர் பைபிளில் ஞான ஆகமம் என்று ஒரு அதிகாரம் உள்ளது. இந்த அதிகாரத்தை புரோட்டஸ்டண்டுகள் நீக்கி விட்டனர்.

அந்த ஆகமத்தில் ஆதாமின் பாவம் மன்னிக்கப்பட்டு விட்டது என்று தெளிவாகக் கூறப்பட்டுள்ளது.

சாவுக்குப் பின் திரும்பி வருதல் இல்லை. முடிவு முத்திரையிடப்படுகின்றது. எவனும் திரும்பி வருதல் இல்லை. முதல் மனிதன் தனியாக உண்டாக்கப்பட்டிருந்தான். ஞானமே அவனைக் காத்து வந்தது. அவனைப் பாவத்தினின்று விடுவித்தது.

ஞான ஆகமம் 10:1

ஆதாம் செய்தது பாவம் என்றாலும் அவர் பாவத்தில் இருந்து விடுவிக்கப்பட்டார் என்று மேற்கண்ட வசனம் தெளிவாகச் சொல்கிறது.

பாவம் செய்த ஆதாமே பாவி இல்லை எனும் போது அவரது சந்ததிகள் பாவிகளாகப் பிறக்கிறார்கள் என்பதும், அவர்களுக்காக இயேசு தன்னையே பலி கொடுத்தார் என்பதும் சுக்கு நூறாக நொறுங்கிப் போகின்றது.

## முந்தைய நீதிமான்களின் நிலை என்ன?

இயேசுவுக்கு முன்னர் வாழ்ந்த நோவா, ஆப்ரஹாம், இஸ்மவேல், இஸ்ரவேல், தாவீது, சாலமோன் உள்ளிட்ட அநேக நீதிமான்கள் பற்றி பைபிள் பேசுகிறது. இவர்கள் நல்லவர்களாகவும் நீதிமான்களாகவும் இருந்தார்கள் என்று பைபிளில் கூறப்படுவது சிலுவைப் பலி கொள்கையை உடைத்து எறிகிறது.

ஏனெனில் முந்தைய நீதிமான்களில் யாரும் இயேசுவைப் பார்க்கவில்லை. மனிதர்களின் பாவத்தைச் சுமக்க இயேசு சிலுவையில் அறையப்படுவார் என்பதை அவர்கள் நம்பிக்கை கொள்ளவில்லை. அப்படி இருந்தும் அவர்கள் நீதிமான்கள் என்று கூறப்படுவ்தால பிறவிப் பாவம் என்று ஒரு பாவம் இல்லை என்பது உறுதியாகின்றது.

பிறவிப்பாவம் என்று ஒன்று இருந்தால் அவர்கள் நீதிமான்களாக முடியாது. ஏனெனில் அவர்கள் யாரும் சிலுவைப் பலி கொள்கையை நம்பவில்லை. அவர்களுக்கு இது தெரிந்திருக்கவும் இல்லை.

## ஒருவர் சுமையை இன்னொருவர் சுமக்க முடியுமா?

ஒரு வாதத்துக்காக ஆதாமின் பாவம் மன்னிக்கப்படவில்லை என்று வைத்துக் கொண்டாலும் சிலுவைப் பலி கொள்கை சரியான கொள்கையாகி விட முடியாது. இந்தக் கொள்கை பைபிளின் போதனைக்கும், பகுத்தறிவுக்கும், உலக நடைமுறைக்கும் எதிரானதாகும்.

குற்றம் செய்யும் மனிதர்களைத் தண்டிக்க உலக நாடுகளில் சட்டங்கள் வகுக்கப்பட்டுள்ளன. போப் ஆண்டவர் ஆட்சி செய்யும் வாடிகன் உள்ளிட்ட கிறித்தவர்கள் ஆட்சி செய்யும் நாடுகளிலும், மற்ற நாடுகளிலும் தந்தை செய்யும் கொலைக்காகவும், இன்ன பிற குற்றங்களுக்காகவும் மகனைத் தண்டிக்கும் வகையில் சட்டம் இயற்றப்படவில்லை. அவ்வாறு சட்டம் இயற்றுவது அறிவுக்கு எதிரானது என்பது உலக மக்கள் அனைவருக்கும் தெரிகிறது.

தந்தை செய்யும் குற்றத்துக்கு மகன் தண்டிக்கப்படுவான் என்று எந்த நாட்டிலாவது சட்டம் இயற்றப்பட்டால் ஒட்டு மொத்த உலகமும் சேர்ந்து இது மனித உரிமைக்கு எதிரானது; காட்டுமிராண்டித்தனமானது என்று கொதித்து எழுந்து விடும்.

மனிதர்களின் சாதாரண அறிவுக்கே இது மடமை என்று தெரிகிறது என்றால் படைத்த இறைவன் இப்படி ஒரு முட்டாள்தனமான சட்டத்தை இயற்றுவானா என்று கிறித்தவ நண்பர்கள் சிந்தித்துப் பார்க்கக் கடமைப்பட்டுள்ளனர்.

ஆதாம் பாவம் செய்தார் என்றால் அதற்கு அவர் மட்டுமே பொறுப்பு. அதற்காகப் பாவியாகக் கருதப்பட வேண்டும் என்றால் ஆதாம் மட்டுமே பாவியாகக் கருதப்பட வேண்டும். அவர் செய்த பாவத்தால் அவரது பிள்ளைகளும் எப்படி பாவிகளாவார்கள்? கடவுளுக்கு அறிவே கிடையாது என்று கருதத் தூண்டும் இந்தக் கொள்கையைக் கிறித்தவ மக்கள் எப்படி நம்புகிறார்கள்?

பைபிளும் கூட இக்கொள்கையை மிகத் தெளிவாகக் கூறுவதைப் பாருங்கள்!

பிள்ளைகளுக்காகப் பிதாக்களும், பிதாக்களுக்காகப் பிள்ளைகளும் கொலை செய்யப்பட வேண்டாம், அவனவன் செய்த பாவத்தினிமித்தம் அவனவன் கொலை செய்யப்பட வேண்டும்

உபாகமம் : 24:16

பாவஞ்செய்கிற ஆத்துமாவே சாகும். குமாரன் தகப்பனுடைய அக்கிரமத்தைச் சுமப்பதுமில்லை. தகப்பன் குமாரனுடைய அக்கிரமத்தைச் சுமப்பதுமில்லை. நீதிமானுடைய நீதி அவன் மேல் தான் இருக்கும், துன்மார்க்கனுடைய துன்மார்க்கமும் அவன் மேல் தான் இருக்கும்

எசேக்கியேல் 18:20

பிதாக்கள் திராட்சக் காய்களைத் தின்றார்கள், பிள்ளைகளின் பற்கள் கூசிப் போயின என்று அந்நாட்களில் சொல்ல மாட்டார்கள், அவனவன் தன்தன் அக்கிரமத்தினிமித்தமே சாவான். எந்த மனுஷன் திராட்சக் காய்களைத் தின்பானோ அவனுடைய பற்களே கூசிப் போகும்

எரேமியா 31:29,30

நமது பகுத்தறிவு எதைச் சரி காண்கிறதோ அதையே தான் பைபிளின் மேற்கண்ட வசனங்கள் கூறுகின்றன. பைபிளின் போதனைப்படியும் அறிவுப்பூர்வமான பார்வையிலும் நாம் பாவிகளாகவே பிறக்கவில்லை எனும் போது நம்முடைய பாவத்தைச் சுமக்க இயேசு தனது உயிரைத் தியாகம் செய்யும் பேச்சுக்கே இடமில்லை.

ஆதம் செய்த பாவத்தால் நாமும் பாவிகளாகப் பிறக்கிறோம் என்று வைத்துக் கொண்டால் இன்னொரு வகையிலும் இக்கொள்கை தவறாக இருக்கிறது.

நாம் பாவிகளாகப் பிறந்தால் நாம் தானே அதற்காகப் பரிகாரம் தேட வேண்டும்? இதற்காக இயேசு ஏன் பலியாக வேண்டும்? அவர் பலியானால் அது அவரது பாவத்துக்குத் தான் பரிகாரமாக அமையுமே தவிர நம்முடைய பாவத்துக்கு எப்படி அது பரிகாரமாக ஆகும்?

இயேசுவின் போதனைகள் பைபிளில் எழுதப்பட்டுள்ளன. மனிதன் பிறக்கும் போது பாவியாகப் பிறக்கிறான் என்றோ, அந்தப் பாவங்களை நான் சுமந்து கொள்வதற்காக என் உயிரைப் பலி கொடுக்கிறேன் என்றோ இயேசு கூறியதாக பைபிளின் கூறப்படவில்லை. கிறித்தவர்களின் எதிரியாக இருந்து அவர்களுக்கு சொல்லொணாத துன்பங்கள் கொடுத்த பவுல் என்பவர் தான் இக்கொள்கையைப் பின்னர் உருவாக்கினாரே தவிர இது இயேசு உருவாக்கிய கொள்கை அல்ல.

## இயேசு தானாகப் பலியானாரா?

மனிதர்களின் பாவங்களைச் சுமந்து கொள்வதற்காக இயேசு தன் உயிரைப் பலி கொடுத்தார் என்பதில் எள்ளளவும் உண்மை இல்லை. பைபிளை நாம் வாசிக்கும் போது பலியாவதை இயேசு அறவே விரும்பவில்லை; அதைத் தவிர்க்க தன்னால் ஆன எல்லா முயற்சிகளையும் அவர் செய்தார். ஆனாலும் எதிரிகளிடம் மாட்டிக் கொண்டார். அவர் விரும்பாமலே எதிரிகளால் சிலுவையில் அறையப்பட்டார் என்று அறிய முடிகிறது.

இப்படி இருக்கும் போது மனிதர்களின் பாவத்தைச் சுமக்க இயேசு தன்னைப் பலி கொடுத்தார் எனக் கூறுவது கட்டுக் கதையாகும். பைபிளுக்கு எதிரானதாகும்.

இதற்கான ஆதாரங்கள் வருமாறு:

### தப்பிக்க முயற்சி செய்தல்

இயேசுவைத் தந்திரமாய்ப் பிடித்துக் கொலை செய்யும்படி ஆலோசனை பண்ணினார்கள்.

மத்தேயு 26:5

அப்பொழுது, பரிசேயர் வெளியே போய், அவரைக் கொலை செய்யும்படி அவருக்கு விரோதமாய் ஆலோசனை பண்ணினார்கள்.

மத்தேயு-12:14

இரண்டு நாளைக்குப் பின்பு புளிப்பில்லாத அப்பஞ்சாப்பிடுகிற பஸ்கா பண்டிகை வந்தது. அப்பொழுது பிரதான ஆசாரியரும் வேதபாரகரும், அவரைத் தந்திரமாய்ப் பிடித்துக் கொலை செய்யும்படி வகை தேடினார்கள்.

மாற்கு-14:1

அப்பொழுது பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் அவரைக் கொலை செய்யும்படி யோசித்து, ஜனங்களுக்குப் பயப்பட்டபடியினால், எவ்விதமாய் அப்படிச் செய்யலாமென்று வகை தேடினார்கள்.

லூக்கா-22:2

இயேசு மனிதர்களின் பாவத்தைச் சுமந்து கொள்ள ஆசைப்படவில்லை. அவரது சீர்திருத்தக் கருத்துக்களால் பாதிக்கப்பட்ட மதகுருமார்களும் ஆட்சியாளர்களும் அவரைக் கொலை செய்ய திட்டமிட்டதன் அடிப்படையிலேயே இயேசு கொல்லப்பட்டார்.

இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டவுடன் இயேசு என்ன செய்தார்? அருமையான வாய்ப்பு! இதற்காகத் தான் நான் காத்துக் கிடந்தேன். இதோ வந்து விட்டேன்; என்னைப் பலியிடுங்கள் என்று முன் வந்தாரா? இல்லை.

தன்னைக் காப்பாற்றுமாறு இறைவனிடம் இறைஞ்சினார்

அது மட்டுமின்றி தன்னைக் காப்பாற்றுமாறு கர்த்தரிடம் மனமுருகி அவர் வேண்டினார்.

**இயேசு கடவுளிடம் மன்றாடினார்**

தன்னைச் சிலுவையில் அறைந்து கொல்ல சதித் திட்டம் தீட்டப்பட்டதை அறிந்த இயேசு அதிலிருந்து தன்னைக் காப்பாற்றுமாறு கடவுளிடம் மன்றாடினார். மனமுருகி பிரார்த்தனை செய்தார் என்று பைபிள கூறுகிறது.

அப்பொழுது, இயேசு அவர்களோடே கெத்செமனே என்னப்பட்ட இடத்திற்கு வந்து, சீஷர்களை நோக்கி: நான் அங்கே போய் ஜெபம் பண்ணுமளவும் நீங்கள் இங்கே உட்கார்ந்திருங்கள் என்று சொல்லி; பேதுருவையும் செபெதேயுவின் குமாரர் இருவரையும் கூட்டிக் கொண்டு போய், துக்கமடையவும் வியாகுலப்படவும் தொடங்கினார். அப்பொழுது, அவர் என் ஆத்துமா மரணத்துக்கேதுவான துக்கங்கொண்டிருக்கிறது; நீங்கள் இங்கே தங்கி, என்னோடே கூட விழித்திருங்கள் என்று சொல்லி, சற்று அப்புறம் போய், முகங்குப்புற விழுந்து: என் பிதாவே, இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கக் கூடுமானால் நீங்கும்படி செய்யும்; ஆகிலும் என் சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று ஜெபம் பண்ணினார் .பின்பு, அவர் சீஷர்களிடத்தில் வந்து, அவர்கள் நித்திரை பண்ணுகிறதைக் கண்டு,

பேதுருவை நோக்கி: நீங்கள் ஒரு மணி நேரமாவது என்னோடே கூட விழித்திருக்கக் கூடாதா? நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு விழித்திருந்து ஜெபம் பண்ணுங்கள்; ஆவி உற்சாகமுள்ளது தான், மாம்சமோ பலவீனமுள்ளது என்றார்;. அவர் மறுபடியும் இரண்டாந்தரம் போய்: என் பிதாவே, இந்தப் பாத்திரத்தில் நான் பானம் பண்ணினாலொழிய இது என்னைவிட்டு நீங்கக் கூடாதாகில், உம்முடைய சித்தத்தின்படி ஆகக்கடவது என்று ஜெபம் பண்ணினார்;. அவர் திரும்ப வந்த போது, அவர்கள் மறுபடியும் நித்திரை பண்ணுகிறதைக் கண்டார்; அவர்களுடைய கண்கள் மிகுந்த நித்திரை மயக்கம் அடைந்திருந்தது. அவர் மறுபடியும் அவர்களை விட்டுப் போய், மூன்றாந்தரமும் அந்த வாட்;த்தைகளையே சொல்லி, ஜெபம் பண்ணினார்

மத்தேயு 26:36-44

பின்பு கெத்செமனே எனப்பட்ட இடத்திற்கு வந்தார்கள். அப்பொழுது அவர் தம்முடைய சீஷர்களை நோக்கி: நான் ஜெபம் பண்ணுமளவும் இங்கே உட்கார்ந்திருங்கள் என்று சொல்லி; பேதுருவையும் யாக்கோபையும் யோவானையும் தம்மோடே கூட்டிக் கொண்டு போய், திகிலடையவும், மிகவும் வியாகுலப்படவும் தொடங்கினார். அப்பொழுது அவர்: என் ஆத்துமா மரணத்துக்கேதுவான துக்கங்கொண்டிருக்கிறது. நீங்கள் இங்கே தங்கி, விழித்திருங்கள் என்று சொல்லி, சற்று அப்புறம்போய், தரையிலே விழுந்து, அந்த வேளை தம்மைவிட்டு நீங்கிப் போகக் கூடுமானால் அது நீங்க வேண்டுமென்று வேண்டிக் கொண்டு: அப்பா பிதாவே, எல்லாம் உம்மாலே கூடும்; இந்தப் பாத்திரத்தை என்னிடத்திலிருந்து எடுத்துப்போடும், ஆகிலும் என் சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்றார். பின்பு அவர் வந்து, அவர்கள் நித்திரை பண்ணுகிறதைக் கண்டு, பேதுருவை நோக்கி: சீமோனே, நித்திரை பண்ணுகிறாயா? ஒரு மணி நேரம் நீ விழித்திருக்கக் கூடாதா? நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு விழித்திருந்து ஜெபம் பண்ணுங்கள். ஆவி உற்சாகமுள்ளது தான், மாம்சமோ பலவீனமுள்ளது என்றார். அவர் மறுபடியும் போய் அந்த வார்த்தைகளையே சொல்லி ஜெபம் ச்பண்ணினார்.

மாற்கு 14:32-39

பின்பு அவர் புறப்பட்டு, வழக்கத்தின்படியே ஒலிவமலைக்குப் போனார்; அவருடைய சீஷரும் அவரோடே கூடப் போனார்கள். அவ்விடத்தில் சோர்ந்த பொழுது அவர் அவர்களை நோக்கி: நீங்கள் சோதனைக்குட்படாதபடிக்கு ஜெபம் பண்ணுங்கள் என்று சொல்லி, அவர்களை விட்டுக் கல்லெறி தூரம் அப்புறம் போய், முழங்கால்படியிட்டு: பிதாவே, உமக்குச் சித்தமானால் இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கும்படி செய்யும்; ஆயினும் என்னுடைய சித்தத்தின்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று ஜெபம் பண்ணினார். அப்பொழுது வானத்திலிருந்து ஒரு தூதன் தோன்றி, அவரைப் பலப்படுத்தினான். அவா; மிகவும் வியாகுலப்பட்டு, அதிக ஊக்கத்தோடே ஜெபம் பண்ணினார். அவருடைய வேர்வை இரத்தத்தின் பெருந்துளிகளாய்த் தரையிலே விழுந்தது. அவா; ஜெபம் பண்ணி முடித்து, எழுந்திருந்து, தம்முடைய சீஷரிடத்தில் வந்து, அவர்கள் துக்கத்தினாலே நித்திரை பண்ணுகிறதைக் கண்டு: நீங்கள் நித்திரை பண்ணுகிறதென்ன? சோதனைக்குட்படாதபடிக்கு, எழுந்திருந்து ஜெபம் பண்ணுங்கள் என்றார்;.

லூக்கா 22:39-46

மனிதர்கள் அனைவரின் பாவத்தைச் சுமப்பதற்காக தன் உயிரைக் கொடுத்தார் என்றால் அவராக முன் வந்து சிலுவையில் தன்னை அறைந்து கொண்டு பலியாகி இருக்க வேண்டும். குறைந்த பட்சம் அதை மனதாலாவது விரும்பி இருக்க வேண்டும். எதிரிகள் தன்னைக் கொன்று விடாமல் காப்பாற்றுமாறு கர்த்தரிடம் அவர் மன்றாடி இருக்கக் கூடாது. அவருக்கே விருப்பமில்லாமல் அவர் மீது வலுக்கட்டாயமாகத் திணிக்கப்பட்டதை அவர் விரும்பி பலியானார் என்று கூறி மக்களை ஏமாற்றுவது நியாயம் தானா?

## பயந்து நடுங்குதல்

பேதுருவையும் செபெதேயுவின் குமாரர் இருவரையும் கூட்டிக் கொண்டுபோய் துக்கமடையவும் வியாகுலப்படவும் தொடங்கினார். அப்பொழுது அவர்: என்

ஆத்துமா மரணத்துக்கேதுவான துக்கங்கொண்டிருக்கிறது; நீங்கள் இங்கே தங்கி என்னோடேகூட விழித்திருங்கள் என்று சொல்லி சற்று அப்புறம்போய் முகங்குப்புற விழுந்து: என் பிதாவே இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கக் கூடுமானால் நீங்கும்படி செய்யும்; ஆகிலும் என் சித்தத்தின்படியல்ல உம்முடைய சித்தத்தின்படியே ஆகக் கடவது என்று ஜெபம் பண்ணினார்.

மத்தேயு 26:37-39

பேதுருவையும் யாக்கோபையும் யோவானையும் தம்மோடே கூட்டிக் கொண்டு போய் திகிலடையவும் மிகவும் வியாகுலப்படவும் தொடங்கினார்.. அப்பொழுது அவர்: என் ஆத்துமா மரணத்துக்கேதுவான துக்கங்கொண்டிருக்கிறது. நீங்கள் இங்கே தங்கி விழித்திருங்கள் என்று சொல்லி

மாற்கு 14:33,34

தன்னைக் கொலை செய்யத் திட்டமிடப்பட்டுள்ளது தெரிய வந்ததும் அவர் துக்கமும் கவலையும் அடைந்துள்ளார். சாதாரணக் கவலை அல்ல. மரணத்துக்கு நிகரான கவலை தனக்கு ஏற்பட்டுள்ளது என்று அவர் கலங்கி இருக்கிறார். இப்படி இருக்கும் போது மனிதர்களின் பாவத்தைச் சுமக்க தன்னையே பலி கொடுத்தார் என்று பவுல் கூறுவதை எப்படி கிறித்தவர்கள் நம்புகிறார்கள்.

## காட்டிக் கொடுக்கப்பட்டார்

மனிதர்களின் ஜென்மப் பாவத்தைச் சுமப்பதற்காக இயேசு தன் உயிரைக் கொடுத்தார் என்று நம்பும் கிறித்தவர்கள், இயேசுவை அவரது சீடர் ஒருவர் காட்டிக் கொடுத்ததாகவும் நம்புகிறார்கள். நான்கு சுவிஷேசங்களும் இதைத் தெளிவாகவும் கூறுகின்றன.

அப்பொழுது பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் அவரைக் கொலை செய்யும்படி யோசித்து ஜனங்களுக்குப் பயப்பட்டபடியினால் எவ்விதமாய் அப்படிச்செய்யலாமென்று வகைதேடினார்கள். அப்பொழுது பன்னிருவரில் ஒருவனாகிய ஸ்காரியோத்தென்னும் மறுபேர் கொண்ட யூதாசுக்குள் சாத்தான் புகுந்தான். அவன் பிரதான ஆசாரியர்களிடத்திலும் சேனைத்

தலைவர்களிடத்திலும் போய் அவரைக் காட்டிக் கொடுக்கும் வகையைக் குறித்து அவர்களோடே ஆலோசனை பண்ணினான். அவர்கள் சந்தோஷப்பட்டு அவனுக்குப் பணங்கொடுக்க உடன்பட்டார்கள். அதற்கு அவன் சம்மதித்து ஜனக் கூட்டமில்லாத வேளையில் அவரை அவர்களுக்குக் காட்டிக் கொடுக்கும்படி சமயந்தேடினான்.

லூக்கா 22:2-6

பின்பு: இதோ என்னைக் காட்டிக் கொடுக்கிறவனுடைய கை என்னுடனே கூடப் பந்தியிலிருக்கிறது. தீர்மானிக்கப்பட்டபடியே மனுஷகுமார்ன் போகிறார் ஆனாலும் அவரைக் காட்டிக்கொடுக்கிற மனுஷனுக்கு ஐயோ என்றார். அப்பொழுது அவர்கள் நம்மில் யார் அப்படிச் செய்வான் என்று தங்களுக்குள்ளே விசாரிக்கத் தொடங்கினார்கள்.

லூக்கா 22:21-23

அவர் அப்படிப் பேசுகையில் ஜனங்கள் கூட்டமாய் வந்தார்கள். அவர்களுக்கு முன்னே பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் என்பவனும் வந்து இயேசுவை முத்தஞ்செய்யும்படி அவரிடத்தில் சேர்ந்தான். இயேசு அவனை நோக்கி: யூதாசே முத்தத்தினாலேயா மனுஷகுமாரனைக் காட்டிக் கொடுக்கிறாய் என்றார்.

லூக்கா 22:47,48

இயேசு இவைகளைச் சொன்ன பின்பு தம்முடைய சீஷருடனே கூட கெதரோன் என்னும் ஆற்றுக்கு அப்புறம் போனார்; அங்கே ஒரு தோட்டம் இருந்தது அதிலே அவரும் அவருடைய சீஷரும் பிரவேசித்தார்கள். இயேசு தம்முடைய சீஷருடனே கூட அடிக்கடி அங்கே போயிருந்தபடியினால் அவரைக் காட்டிக் கொடுக்கிற யூதாசும் அந்த இடத்தை அறிந்திருந்தான். யூதாஸ் போர்ச்சேவகரின் கூட்டத்தையும் பிரதான ஆசாரியர் பரிசேயர் என்பவர்களால் அனுப்பப்பட்ட ஊழியக்காரரையும் கூட்டிக் கொண்டு பந்தங்களோடும் தீவட்டிகளோடும் ஆயுதங்களோடும் அவ்விடத்திற்கு வந்தான்.

யோவான் 18:1-3

அவர்கள் பந்தியமர்ந்து போஜனம் பண்ணுகையில் இயேசு அவர்களை நோக்கி: என்னுடனே புசிக்கிற உங்களில் ஒருவன் என்னைக் காட்டிக் கொடுப்பான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார்.

மாற்கு 14:18

அவரைக் காட்டிக் கொடுக்கிறவன்: நான் எவனை முத்தஞ்செய்வேனோ அவன் தான் அவனைப் பிடித்துப் பத்திரமாய்க் கொண்டுபோங்கள் என்று அவர்களுக்குக் குறிப்புச் சொல்லியிருந்தான். அவன் வந்தவுடனே அவரண்டையில் சேர்ந்து: ரபீ ரபீ என்று சொல்லி அவரை முத்தஞ்செய்தான். அப்பொழுது அவர்கள் அவர்மேல் கைபோட்டு அவரைப் பிடித்தார்கள்.

மாற்கு 14:44-46

நான் அவரை உங்களுக்குக் காட்டிக் கொடுக்கிறேன் நீங்கள் எனக்கு என்ன கொடுக்கிறீர்கள் என்றான். அவர்கள் அவனுக்கு முப்பது வெள்ளிக்காசைக் கொடுக்க உடன்பட்டார்கள். அது முதல் அவன் அவரைக் காட்டிக் கொடுப்பதற்குச் சமயம் பார்த்துக் கொண்டிருந்தான்.

மத்தேயு 26:15,16

மனிதர்களின் பாவங்களைச் சுமப்பதற்காக இயேசு தன்னைத் தானே பலி கொடுத்தார் என்பது உண்மையாக இருந்தால் அவர் தானாக தன்னைச் சிலுவையில் அறைந்திருக்க வேண்டும். அல்லது அவரது எதிரிகள் அவரைச் சிலுவையில் அறைந்து கொல்ல முடிவு செய்திருப்பதைக் கேள்விப்பட்டு அதை வரவேற்றிருக்க வேண்டும். அவ்வாறு செய்யாமல் அவர் ஓடி ஒளிந்திருக்கிறார். இதனால் தான் அவரது சீடர்களில் ஒருவரே அவரைக் காட்டிக் கொடுக்கும் நிலை ஏற்பட்டது. ஓடி ஒளிந்து தலைமறைவு வாழ்க்கை வாழ்பவரைத் தான் காட்டிக் கொடுக்கும் அவசியம் ஏற்படும்.

தன்னைப் பலி கொடுக்க அறவே விருப்பமில்லாத ஒருவரை வலுக்கட்டாயமாக யாராவது பலி கொடுத்தால் அது அவர் மனமுவந்து கொடுத்த பலியாக ஆகுமா?

எல்லா மனிதர்களும் இது போன்ற இடர் வரும் போது எப்படி தன்னைத் தற்காத்துக் கொள்ள முயற்சி செய்வார்களோ அது போல் தான் இயேசுவும் முயற்சி செய்தார். இது ஒரு சாதாரணமான சம்பவம் தானே தவிர மனித குலத்தின் பாவத்தைச் சுமக்க பலி கொடுத்தல் என்பதற்கு இதில் எந்த ஆதாரமும் இல்லை. கிறித்தவ மக்கள் இதைக் கவனமுடன் சிந்திக்கக் கடமைப்பட்டுள்ளார்கள்.

அது மட்டுமின்றி இனி மேல் தப்பிக்க முடியாது என்ற நிலை ஏற்பட்ட போது கடைசிக் கட்டத்தில் அவர் கூறிய வார்த்தைகள் சிலுவைப் பலி கொள்கை கட்டுக் கதை என்பதற்கு மறுக்க முடியாத சான்றாக அமைந்துள்ளது.

## ஏன் என்னைக் கைவிட்டீர்?

ஒன்பதாம் மணி நேரத்தில் இயேசு: ஏலி! ஏலி! லாமா சபக்தானி என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்; அதற்கு என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர் என்று அர்த்தமாம். அங்கே நின்றவர்களில் சிலர் அதைக் கேட்ட பொழுது: இவன் எலியாவைக் கூப்பிடுகிறான் என்றார்கள். உடனே அவர்களில் ஒருவன் ஓடி கடற்காளானை எடுத்து காடியில் தோய்த்து அதை ஒரு கோலில் மாட்டி அவருக்குக் குடிக்கக் கொடுத்தான். மற்றவர்களோ: பொறு எலியா இவனை இரட்சிக்க வருவானோ பார்ப்போம் என்றார்கள். இயேசு மறுபடியும் மகா சத்தமாய்க் கூப்பிட்டு ஆவியை விட்டார். அப்பொழுது தேவாலயத்தின் திரைச் சீலை மேல் தொடங்கிக் கீழ்வரைக்கும் இரண்டாகக் கிழிந்தது பூமியும் அதிர்ந்தது கன்மலைகளும் பிளந்தது.

மத்தேயு 27:46-51

ஒன்பதாம் மணி நேரத்திலே இயேசு: எலோயீ! எலோயீ! லாமா சபக்தானி என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்; அதற்கு: என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர் என்று அர்த்தமாம். அங்கே நின்றவர்களில் சிலர் அதைக் கேட்ட பொழுது: இதோ எலியாவைக் கூப்பிடுகிறான் என்றார்கள். ஒருவன் ஓடி கடற்காளானைக் காடியிலே தோய்த்து அதை ஒரு கோலில் மாட்டி அவருக்குக் குடிக்கக் கொடுத்து: பொறுங்கள் எலியா இவனை இறக்க வருவானோ பார்ப்போம் என்றான். இயேசு மகா சத்தமாய்க் கூப்பிட்டு ஜீவனை விட்டார். அப்பொழுது தேவாலயத்தின் திரைச் சீலை மேல் தொடங்கிக் கீழ்வரைக்கும் இரண்டாகக் கிழிந்தது. அவருக்கு எதிரே நின்ற நூற்றுக்கு அதிபதி அவர் இப்படிக் கூப்பிட்டு ஜீவனை விட்டதைக் கண்ட போது: மெய்யாகவே இந்த மனுஷன் தேவனுடைய குமாரன் என்றான்.

மாற்கு 15:34-39

உயிரை விடும் போது கடைசியாக என் தேவனே ஏன் என்னைக் கைவிட்டீர் என்று இயேசு கூறியதில் இருந்து தெரிய வருவது என்ன? கடவுள் எப்படியும் நம்மைக் காப்பாற்றி விடுவார்; நாம் சிலுவையில் இருந்து தப்பித்து விடுவோம்

என்று தான் அவர் நம்பி இருக்கிறார். அத்தகைய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருக்கிறார். அந்த எதிர்பார்ப்பு நிறைவேறாமல் போன பின் ஏன் என்னைக் கைவிட்டீர் என்று கர்த்தரிடம் முறையிட்டு உயிரை விட்டார். அப்படியானால் இவர் தன்னைப் பலி கொடுக்கும் எண்ணம் அறவே இல்லாதிருந்தார் என்பது தெரிகிறது.

கடைசி வரை உயிர் பிழைக்கப் போராடிய இயேசு அவரது விருப்பத்துக்கு மாறாக சிலுவையில் அறையப்பட்ட இயேசு பாவிகளை இரட்சிக்க தன்னையே பலி கொடுத்தார் என்று கிறித்தவர்கள் எப்படி நம்புகிறார்கள்? இயேசுவுக்கு எதிராக புதுக் கொள்கையை ஆதாரமின்றி உருவாக்கிய பவுலின் கொள்கையை இயேசுவின் கொள்கை என்று எப்படி நம்புகிறார்கள்? இது தான் நமக்கு வியப்பாக உள்ளது. பைபிளுக்கு எதிரான ஒரு கொள்கை- இயேசுவுக்கு எதிரான ஒரு கொள்கை இயேசுவின் கொள்கை என்று ஆக்கப்பட்டது வரலாற்று அதிசயமாகவே தெரிகிறது.

## சிலுவை மரணம் சாபத்திற்குரியது

பைபிளின் கோட்பாட்டின் படி இயேசு சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டிருக்க முடியாது. ஏனெனில் சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டவர் சாபத்திற்கு உரியவர் என்று பைபிள் கூறுகிறது.

மரத்தில் தொங்க விடப்பட்டவன் கடவுளால் சபிக்கப்பட்டவன்

உபாகமம் 21:23

இயேசு கடவுளின் நேசர்களில் ஒருவராக இருக்கும் போது அவருக்கு சாபத்துக்கு உரிய துர்மரணம் ஏற்பட்டிருக்க முடியாது.

இயேசு சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டார் என்று யாராவது நம்பினால் இயேசு கடவுளின் சாபத்துக்கு உரியவர் எனக் கூறி இயேசுவை இழிவு செய்தவராவார்.

## நீதிமான்களைக் கர்த்தர் கைவிடுவதில்லை

தன்னைக் கொலை செய்யத் திட்டமிட்டுள்ள செய்தி தெரிந்த பின் இயேசு கடவுளிடம் திரும்பத் திரும்ப மன்றாடியுள்ளார். நீதிமானாகிய இயேசு தன்னைப் படைத்த கர்த்தரிடம் அழுது புலம்பி மன்றாடி இருக்கும் போது அதைக் கர்த்தர் கண்டு கொள்ளாமல் இருப்பாரா?

உம்முடைய சித்தத்தின்படியே ஆகக்கடவது என்று ஜெபம் பண்ணினார். அப்பொழுது வானத்திலிருந்து ஒரு தூதன் தோன்றி, அவரைப் பலப்படுத்தினான்.

லூக்கா 22:42,43

வானத்தில் இருந்து ஒரு தூதன் தோன்றி அவரைப் பலப்படுத்தினான் என்று லூக்கா கூறுகிறார். இயேசு செய்த பிரார்த்தனையை கர்த்தர் ஏற்றுக் கொண்டு அவரைக் காப்பாற்றவே தூதனை அனுப்பி பலப்படுத்தினார்.

தன்னைக் காப்பாற்றுமாறு கர்த்தரிடம் இயேசு மன்றாடி இருக்கும் போது கடவுள் அவரைக் காப்பாற்றி இருப்பார். ஏனெனில் நல்லோர்களின் வேண்டுதல் கர்த்தரால் ஏற்றுக் கொள்ளப்படும் என்று பைபிள் கூறுகிறது.

நீதிமானுக்கு வரும் துன்பங்கள் அனேகமாயிருக்கும். கர்த்தர் அவைகளெல்லாவற்றிலும் நின்று அவனை விடுவிப்பார்.

(சங்கீதம் 34:19)

இதன் அடிப்படையில் பார்த்தாலும் இயேசு சிலுவையில் அறைந்து கொல்லப்பட்டிருக்க முடியாது.

இயேசு சிலுவையில் கொல்லப்பட்டு மூன்றாம் நாளில் உயிர்பெற்று எழுந்து கர்த்தரின் வலது பாரிசத்தில் அமர்ந்தார் என்பது உண்மையானால் இயேசு இப்படி பிரார்த்தித்திருக்க மாட்டார்.

கர்த்தரே சீக்கிரம் என்னை அழைத்துக் கொண்டு உமக்கௌ அருகில் அவைத்துக் கொள்வீராக என்று தான் பிரார்த்தனை செய்திருப்பார். அவ்வாறு பிரார்த்தனை செய்யாமல் தன்னைக் காப்பாற்றுமாறு பிரார்த்தனை செய்ததில் இருந்து சிலுவைப்பலி என்பது பொய்யான தகவல் என்று அறிந்து கொள்ளலாம்.

## எண்ணற்ற முரண்பாடுகள்

இயேசு சிலுவையில் அறையப்படுவது தொடர்பான செய்திகளில் அநேக முரண்பாடுகள் காணப்படுகின்றன. இந்த முரண்பாடுகளும் சிலுவைப் பலியில் உள்ள சந்தேகத்தைப் பல மடங்கு அதிகரிக்கிறது.

### காட்டிக் கொடுத்ததில் முரண்பாடு

அப்பொழுது, பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ்காரியோத்து என்பவன் பிரதான ஆசாரியாரிடத்திற்குப் போய்: நான் அவரை உங்களுக்குக் காட்டிக் கொடுக்கிறேன், நீங்கள் எனக்கு என்ன கொடுக்கிறீர்கள் என்றான். அவர்கள் அவனுக்கு முப்பது வெள்ளிக்காசைக் கொடுக்க உடன்பட்டார்கள்.

மத்தேயு 26:14,15

அவர்கள் போஜனம் பண்ணுகையில், அவர்: உங்களிலொருவன் என்னைக் காட்டிக் கொடுப்பான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன் என்றார். அப்பொழுது, அவர்கள் மிகவும் துக்கமடைந்து, அவரை நோக்கி: ஆண்டவரே, நானோ, நானோ? என்று ஒவ்வொருவராய்க் கேட்கத் தொடங்கினார்கள். அவர் பிரதியுத்தரமாக: என்னோடே கூடத் தாலத்தில் கையிடுகிறவனே என்னைக் காட்டிக் கொடுப்பான். மனுஷகுமாரன் தம்மைக் குறித்து எழுதியிருக்கிறபடியே போகிறார்; ஆகிலும், எந்த மனுஷனால் மனுஷகுமாரன் காட்டிக் கொடுக்கப்படுகிறாரோ, அந்த மனுஷனுக்கு ஐயோ; அந்த மனுஷன் பிறவாதிருந்தானானால் அவனுக்கு நலமாயிருக்கும் என்றார். அவரைக் காட்டிக் கொடுத்த யூதாசும் அவரை நோக்கி: ரபீ, நானோ? என்றான்; அதற்கு அவர்: நீ சொன்னபடி தான் என்றார்.

மத்தேயு 26:21-26

அவர் அப்படிப் பேசுகையில் ஜனங்கள் கூட்டமாய் வந்தார்கள். அவர்களுக்கு முன்னே பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் என்பவனும் வந்து இயேசுவை முத்தஞ்செய்யும்படி அவரிடத்தில் சேர்ந்தான். இயேசு அவனை நோக்கி: யூதாசே முத்தத்தினாலேயா மனுஷகுமாரனைக் காட்டிக் கொடுக்கிறாய் என்றார்.

லூக்கா 22:47,48

அவரைக் காட்டிக் கொடுக்கிறவன்: நான் எவனை முத்தஞ்செய்வேனோ அவன் தான் அவனைப் பிடித்துப் பத்திரமாய்க் கொண்டு போங்கள் என்று அவர்களுக்குக் குறிப்புச் சொல்லியிருந்தான். அவன் வந்தவுடனே அவரண்டையில் சேர்ந்து: ரபீ ரபீ என்று சொல்லி அவரை முத்தஞ்செய்தான். அப்பொழுது அவர்கள் அவர் மேல் கைபோட்டு அவரைப் பிடித்தார்கள்.

மாற்கு 14:44-46

இயேசு அன்றைய மக்களால் நன்கு அறியப்பட்டிருந்தார். அவரைப் பார்த்தவுடன் அவரை அறிந்து கொள்ள முடியும். ஒருவன் முத்தமிட்டு காட்டிக் கொடுக்கும் அவசியம் ஏதும் இருக்கவில்லை. பொதுவாகக் காட்டிக் கொடுக்கப்படுதல் என்பது மக்கள் மத்தியில் அனுதாபத்தை ஏற்படுத்தும் என்பதற்காகவே இது கற்பனை செய்யப்பட்டிருக்க வேண்டும். இயேசுவைக் காட்டிக் கொடுக்கும் அவசியம் ஏதும் இல்லை என்று இயேசுவே மறு மொழி கூறியதாகவும் பைபிள் கூறுகிறது.

பின்பு இயேசு தமக்கு விரோதமாய் வந்த பிரதான ஆசாரியர்களையும் தேவாலயத்துச் சேனைத் தலைவர்களையும் மூப்பர்களையும் நோக்கி: ஒரு கள்ளனைப் பிடிக்கப் புறப்பட்டு வருகிறது போல நீங்கள் பட்டயங்களையும் தடிகளையும் எடுத்துப் புறப்பட்டு வந்தீர்களே. நான் தினந்தோறும் தேவாலயத்தில் உங்களுடனே கூட இருக்கையில் நீங்கள் என்னைப் பிடிக்கக் கை நீட்டவில்லை; இதுவோ உங்களுடைய வேளையும் அந்தகாரத்தின் அதிகாரமுமாயிருக்கிறது என்றார்.

லூக்கா 22:52,53

இயேசு தமக்கு நேரிடப் போகிற எல்லாவற்றையும் அறிந்து எதிர் கொண்டு போய் அவர்களை நோக்கி: யாரைத் தேடுகிறீர்கள் என்றார். அவருக்கு அவர்கள் பிரதியுத்தரமாக: நசரேயனாகிய இயேசுவைத் தேடுகிறோம் என்றார்கள். அதற்கு இயேசு: நான் தான் என்றார். அவரைக் காட்டிக் கொடுத்த யூதாசும் அவர்களுடனே

கூட நின்றான்.. நான் தான் என்று அவர் அவர்களிடத்தில் சொன்னவுடனே அவர்கள் பின்னிட்டுத் தரையிலே விழுந்தார்கள். அவர் மறுபடியும் அவர்களை நோக்கி: யாரைத் தேடுகிறீர்கள் என்று கேட்டார். அவர்கள்: நசரேயனாகிய இயேசுவைத் தேடுகிறோம் என்றார்கள். இயேசு பிர்தியுத்தரமாக: நான் தானென்று உங்களுக்குச் சொன்னேனே; என்னைத் தேடுகிறதுண்டானால் இவர்களைப் போக விடுங்கள் என்றார். நீர் எனக்குத் தந்தவர்களில் ஒருவனையும் நான் இழந்து போகவில்லையென்று அவர் சொல்லிய வசனம் நிறைவேறத்தக்கதாக இப்படி நடந்தது. அப்பொழுது சீமோன் பேதுரு தன்னிடத்திலிருந்த பட்டயத்தை உருவி பிரதான ஆசாரியனுடைய வேலைக்காரனை வலது காதற வெட்டினான்; அந்த வேலைக்காரனுக்கு மல்குஸ் என்று பெயர். அப்பொழுது இயேசு பேதுருவை நோக்கி: உன் பட்டயத்தை உறையிலே போடு;. பிதா எனக்குக் கொடுத்த பாத்திரத்தில் நான் பானம் பண்ணாதிருப்பேனோ என்றார்.

யோவான் 18:4-11

**வேலைக்காரன் காதை வெட்டியது**

இயேசுவைப் பிடிக்க அதிகாரிகள் பெரும் படையுடன் வந்திருக்கும் போது பிரதான ஆசாரியானுடைய காதை பேதுரு வெட்டியதாக மேற்கண்ட வசனத்தில் யோவான் கூறுகிறார். காது வெட்டிய கதையை மத்தேயுவும் கூறுகிறார்.

இயேசுவைப் பிடிக்க அதிகாரிகள் வந்திருக்கும் போது வேலைக்காரனை பேதுரு ஏன் வெட்ட வேண்டும்? அதனால் இயேசு தப்பித்துக் கொள்வாரா?

இயேசு மாட்டிக் கொண்டவுடன் எனக்கு இயேசுவைத் தெரியாது என்று கூறும் அளவுக்கு நெஞ்சுறுதி மிக்க (?) பேதுரு பெரும் படையினர் முன்னிலையில் அவர்களின் வேலைக்காரனை வெட்டியிருக்க முடியாது.

அப்பொழுது எல்லாரும் அவரை விட்டு ஓடிப் போனார்கள்

மாற்கு 14:50

அதிகாரிகள் வந்த உடன் இயேசுவை அம்போ என்று விட்டு விட்டு ஓட்டம் பிடித்தவர்கள் அரசு ஊழியரின் காதை வெட்டும் அளவுக்குத் துணிந்திருக்க முடியாது.

இயேசுவின் மீது அந்த அளவுக்கு பாசம் இருந்தது என்றால் யூதாஸ் காட்டிக் கொடுப்பான் என்று இயேசு கூறியவுடன் அவனை வெட்டி இருக்க வேண்டும். அல்லது காட்டிக் கொடுத்த பிறகாவது அவனை வெட்டி இருக்க வேண்டும்.

எந்த அதிகாரியும் தமது ஊழியரைத் தாக்குவதைப் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க மாட்டார். பேதுரு வேலைகாரனின் காதை வெட்டி இருந்தால் அந்த நிமிடமே பேதுருவின் தலையைச் சீவி இருப்பார்கள். அல்லது அவரையும் பிடித்துக் கொண்டு போய் இருப்பார்கள். ஆனால் இது அந்தப் படையினர் மத்தியில் எந்தச் சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. எருமை மாட்டின் மீது மழை பெய்தது போல் அதிகாரிகள் இருந்ததாக பைபிள் சித்தரிப்பது நம்பும்படி இல்லை.

கற்பனையாகவே இதைப் புனைந்திருக்கிறார்கள் என்பது இதில் இருந்து தெரிகிறது.

**காட்டிக் கொடுப்பது தெரியும்; தெரியாது**

இயேசு காட்டிக் கொடுக்கப்பட்டாரா? அல்லது தன்னைத் தானே காட்டிக் கொடுத்துக் கொண்டாரா என்பதில் சுவிஷேசங்கள் முரண்படுவது சிலுவைப் பலியில் சந்தேகத்தை அதிகப்படுத்துகிறது.

தனது சீடர்களில் ஒருவன் தன்னைக் காட்டிக் கொடுப்பான் என்று இயேசு சீடர்கள் மத்தியில் கூறியதாகவும், காட்டிக் கொடுக்கும் யூதாஸிடம் நேருக்கு நேராகவும் இதை இயேசு கூறினார் என்றும், தன்னை முத்தம் செய்வதன் மூலம் அவன் காட்டிக் கொடுப்பான் என்று இயேசு கூறியதாகவும் பைபிள் ஒரு புறம் கூறுகிறது.

அவர்கள் போஜனம் பண்ணுகையில், அவர்: உங்களிலொருவன் என்னைக் காட்டிக் கொடுப்பான் என்று மெய்யாகவே உங்களுக்குச் சொல்லுகிறேன்

என்றார். அப்பொழுது, அவர்கள் மிகவும் துக்கமடைந்து, அவரை நோக்கி: ஆண்டவரே, நானோ, நானோ? என்று ஒவ்வொருவராய்க் கேட்கத் தொடங்கினார்கள். அவர் பிரதியுத்தரமாக: என்னோடே கூடத் தாலத்தில் கையிடுகிறவனே என்னைக் காட்டிக் கொடுப்பான். மனுஷகுமாரன் தம்மைக் குறித்து எழுதியிருக்கிறபடியே போகிறார்; ஆகிலும், எந்த மனுஷனால் மனுஷகுமாரன் காட்டிக் கொடுக்கப்படுகிறாரோ, அந்த மனுஷனுக்கு ஐயோ; அந்த மனுஷன் பிறவாதிருந்தானானால் அவனுக்கு நலமாயிருக்கும் என்றார். அவரைக் காட்டிக் கொடுத்த யூதாசும் அவரை நோக்கி: ரபீ, நானோ? என்றான்; அதற்கு அவர்: நீ சொன்னபடி தான் என்றார்.

மத்தேயு 26:21-26

இவ்வாறு கூறும் மத்தேயு தனக்குத் தானே முரண்பட்டு கூறுவதைப் பாருங்கள்!

அவர் இப்படிப் பேசுகையில், பன்னிருவரில் ஒருவனாகிய யூதாஸ் வந்தான், அவனோடே கூடப் பிரதான ஆசரியரும் ஜனத்தின் மூப்பரும் அனுப்பின திரளான ஜனங்கள் பட்டயங்களையும் தடிகளையும் பிடித்துக் கொண்டு வந்தார்கள். அவரைக் காட்டிக் கொடுக்கிறவன்: நான் எவனை முத்தஞ்செய்வேனோ அவன் தான், அவனைப் பிடித்துக் கொள்ளுங்கள் என்று அவர்களுக்கு அடையாளம் சொல்லியிருந்தான். உடனே, அவன் இயேசுவினிடத்தில் வந்து: ரபீ, வாழ்க என்று சொல்லி, அவரை முத்தஞ்செய்தான். இயேசு அவனை நோக்கி: சிநேகிதனே, என்னத்திற்காக வந்திருக்கிறாய் என்றார். அப்பொழுது, அவர்கள் கிட்ட வந்து, இயேசுவின் மேல் கைபோட்டு, அவரைப் பிடித்தார்கள்.

மத்தேயு 26:47-50

காட்டிக் கொடுப்பவன் வந்து முத்தம் செய்யும் போது என்னத்திற்காக வந்துள்ளாய் என்று இயேசு கேட்டதிலிருந்து தன்னைக் காட்டிக் கொடுக்கவே அவன் வந்துள்ளான் என்பது இயேசுவுக்குத் தெரியவில்லை. இயேசுவுக்கு

இவன் முத்தம் செய்து காட்டிக் கொடுப்பான் என்பது இயேசுவுக்குத் தெரியும் எனக் கூறிய மத்தேயு இப்போது இயேசுவுக்குத் தெரியாது என்கிறார்.

**சிலுவையைச் சுமந்தது யார்?**

சிலுவையில் அறைவதற்காக இயேசுவை இழுத்துச் செல்லும் போது அவருக்குரிய சிலுவையை யார் சுமந்து சென்றார் என்ற செய்தியைக் கூறும் போதும் சுவிஷேசக்காரர்கள் முரண்பட்டுக் கூறுகிறார்கள்.

போகையில் சிரேனே ஊரானாகிய சீமோன் என்னப்பட்ட ஒரு மனுஷனை அவர்கள் கண்டு அவருடைய சிலுவையைச் சுமக்கும்படி அவனைப் பலவந்தம் பண்ணினார்கள். கபாலஸ்தலம் என்று அர்த்தங்கொள்ளும் கொல்கொதா என்னும் இடத்துக்கு அவர்கள் வந்த போது கசப்புக் கலந்த காடியை அவருக்குக் குடிக்கக் கொடுத்தார்கள்; அவர் அதை ருசிபார்த்து குடிக்க மனதில்லாதிருந்தார்.

மத்தேயு 27:32-34

சிரேனே ஊரானும் அலெக்சந்தருக்கும் ரூப்புக்கும் தகப்பனுமாகிய சீமோன் என்னப்பட்ட ஒருவன் நாட்டிலிருந்து அவ்வழியே வருகையில் அவருடைய சிலுவையைச் சுமக்கும்படி அவனைப் பல வந்தம் பண்ணினார்கள். கபாலஸ்தலம் என்று அர்த்தங்கொள்ளும் கொல்கொதா என்னும் இடத்துக்கு அவரைக் கொண்டுபோய் வெள்ளைப் போளம் கலந்த திராட்ச ரசத்தை அவருக்குக் குடிக்கக் கொடுத்தார்கள்; அவர் அதை ஏற்றுக் கொள்ளவில்லை.

மாற்கு 15:21-23

அவர்கள் இயேசுவைக் கொண்டு போகிற போது நாட்டிலிருந்து வருகிற சிரேனே ஊரானாகிய சீமோன் என்கிற ஒருவனைப் பிடித்து சிலுவையை அவர் பின்னே சுமந்து கொண்டு வரும்படி அதை அவன் மேல் வைத்தார்கள். திரள் கூட்டமான ஜனங்களும் அவருக்காகப் புலம்பி அழுகிற ஸ்திரீகளும் அவருக்குப் பின் சென்றார்கள்.

லூக்கா 23:26,27

இயேசுவின் சிலுவையை சீமோன் என்பவன் சுமந்து வந்தான் என்று மேற்கண்ட மூன்று சுவிஷேசக்காரர்கள் கூறுகிறார்கள். இதற்கு முரண்பட்டு இயேசுவே தனது சிலுவையை சுமந்து சென்றதாக யோவான் கூறுகிறார்.

அவர் தம்முடைய சிலுவையைச் சுமந்து கொண்டு எபிரெயு பாஷையிலே கொல்கொதா என்று சொல்லப்படும் கபாலஸ்தலம் என்கிற இடத்திற்குப் புறப்பட்டுப் போனார்கள்.

யோவான் 19:17

குறிப்பிட்ட தூரம் வரை சீமோனும் அதன் பிறகு இயேசுவும் சுமந்திருக்கலாம் என்று கூறி சமாளிக்கவும் முடியாது. ஏனெனில் சிலுவையில் அறையப்படும் இடமாகிய கொல்கொதா எனும் இடம் வரை சிலுவையை சீமோன் சுமந்ததாக மாற்கு கூறுகிறார். அதே கொல்கொதா இடம் வரை இயேசு சிலுவையைச் ச்சுமந்ததாக யோவான் கூறுகிறார்.

## இயேசுவை நிந்தித்தவர் ஒருவரா? இருவரா?

இயேசு சிலுவையில் அறையப்படும் போது அவருக்கு வலது பக்கம் ஒருவரும் இடது பக்கம் ஒருவருமாக இரண்டு திருடர்கள் சிலுவையில் அறையப்பட்டனர் என்று பைபிள் கூறுகிறது. இந்த விபரத்திலும் முரண்பாடு காணப்படுகிறது.

அந்த வழியாய் நடந்து போகிறவர்கள் தங்கள் தலைகளைத் துலுக்கி: தேவாலயத்தை இடித்து மூன்று நாளைக்குள்ளே கட்டுகிறவனே உன்னை நீயே ரட்சித்துக் கொள்; நீ தேவனுடைய குமாரனானால் சிலுவையிலிருந்து இறங்கிவா என்று அவரைத் தூஷித்தார்கள். அப்படியே பிரதான ஆசாரியரும் வேதபாரகரும் மூப்பரும் பரியாசம் பண்ணி: மற்றவர்களை ரட்சித்தான்;;;: தன்னைக் தான் ரட்சித்துக் கொள்ளத் திராணியில்லை; இவன் இஸ்ரவேலின் ராஜாவானால் இப்பொழுது சிலுவையிலிருந்து இறங்கி வரட்டும். அப்பொழுது இவனை விசுவாசிப்போம். தன்னைத் தேவனுடைய குமாரனென்று சொல்லி தேவன் மேல் நம்பிக்கையாயிருந்தானே; அவர் இவன் மேல் பிரியமாயிருந்தால் இப்பொழுது இவனை இரட்சிக்கட்டும் என்றார்கள். அவரோடே கூடச் சிலுவைகளில் அறையப்பட்ட கள்ளரும் அந்தப்படியே அவரை நிந்தித்தார்கள்.

மத்தேயு 27:39-44

நாம் கண்டு விசுவாசிக்கத்தக்கதாக இஸ்ரவேலுக்கு ராஜாவாகிய கிறிஸ்து இப்பொழுது சிலுவையிலிருந்திறங்கட்டும் என்று சொல்லிக் கொண்டார்கள். அவரோடே கூடச் சிலுவைகளில் அறையப்பட்டவர்களும் அவரை நிந்தித்தார்கள்.

மாற்கு 15:32

இரண்டு திருடர்களும் இயேசுவை நிந்தனை செய்ததாக மத்தேயுவும் மாற்கும் கூறுகிறார்கள். ஆனால் லூக்கா இதற்கு முரண்பட்டுக் கூறுகிறார். ஒரு திருடன் இயேசுவை நிந்தித்ததாகவும் இன்னொரு திருடன் இயேசுவுக்கு பரிந்து பேசியதாகவும் அவர் கூறுகிறார்.

அன்றியும் சிலுவையில் அறையப்பட்டிருந்த குற்றவாளிகளில் ஒருவன்: நீ கிறிஸ்துவானால் உன்னையும் எங்களையும் இரட்சித்துக் கொள் என்று அவரை இகழ்ந்தான். மற்றவன் அவனை நோக்கி: நீ இந்த ஆக்கினைக்குட்பட்டவனாயிருந்தும் தேவனுக்குப் பயப்படுகிறதில்லையா? நாமோ நியாயப்படி தண்டிக்கப்படுகிறோம்;. நாம் நடப்பித்தவைகளுக்குத் தக்க பலனை அடைகிறோம்;. இவரோ தகாததொன்றையும் நடப்பிக்கவில்லையே என்று அவனைக் கடிந்து கொண்டு இயேசுவை நோக்கி: ஆண்டவரே நீர் உம்முடைய ராஜ்யத்தில் வரும் போது அடியேனை நினைத்தருளும் என்றான். இயேசு அவனை நோக்கி: இன்றைக்கு நீ என்னுடனே கூடப் பரதீசிலிருப்பாய் என்று மெய்யாகவே உனக்குச் சொல்லுகிறேன் என்றார்.

லூக்கா 23:40-43

## கல்லறைக்கு முதலில் வந்தவர் யார்

சிலுவையில் இருந்து இறக்கப்பட்ட இயேசுவின் உடல் கல்லறைக்குள் வைக்கப்பட்டது. கல்லறைக்குள் வைக்கப்பட்ட உடல் காணாமல் போனது பற்றி நான்கு சுவிஷேசக்காரர்களும் முரண்பட்டுக் கூறுகிறார்கள்.

ஓய்வு நாள் முடிந்து, வாரத்தின் முதலாம் நாள் விடிந்து வருகையில், மகதலேனா மரியாளும் மற்ற மரியாளும் கல்லறையைப் பார்க்க வந்தார்கள்.

மத் 28:1

வாரத்தின் முதல் நாளில் மகதலேனா மரியாளும் மற்றொரு மரியாளும் வந்து கல்லறையில் இயேசுவின் உடல் காணாமல் போனதைப் பார்த்ததாக மத்தேயு குறிப்பிடுகிறார்.

ஓய்வு நாளான பின்பு மகதலேனா மரியாளும், யாக்கோபின் தாயாகிய மரியாளும், சலோமே என்பவளும், அவருக்குச் சுகந்தவர்க்கமிடும்படி அவைகளை வாங்கிக் கொண்டு.

மாற்கு 16:1

மகதலேனா மரியாளும் மற்றொரு மரியாளும் சலாமே என்பவளும் கல்லறையில் இருந்து இயேசுவின் உடல் காணாமல் போனதைப் பார்த்ததாக மாற்கு குறிப்பிடுகிறார்.

கலிலேயாவிலிருந்து அவருடனே கூட வந்திருந்த ஸ்திரிகளும் பின்சென்று, கல்லறையையும் அவருடைய சரீரம் வைக்கப்பட்ட விதத்தையும் பார்த்து, திரும்பிப் போய், கந்தவர்க்கங்களையும் பரிமள தைலங்களையும் ஆயத்தம் பண்ணி, கற்பனையின்படியே ஓய்வு நாளில் ஓய்ந்திருந்தார்கள்.

லூக்கா 23:55,56

வாரத்தின் முதலாம் நாள் அதிகாலையிலே தாங்கள் ஆயத்தம் பண்ணின கந்தவர்க்கங்களை அவர்கள் எடுத்துக் கொண்டு வேறு சில ஸ்திரிகளோடுங் கூடக் கல்லறையினிடத்தில் வந்தார்கள்.

லூக்கா 24:1

கலிலேயோவில் இருந்து வந்திருந்த பெண்களும் இன்னும் அநேக பெண்களும் வாரத்தின் முதல் நாளில் கல்லறைக்கு வந்து இயேசுவின் உடல் காணாமல் போனதைப் பார்த்ததாக லூக்கா கூறுகிறார்.

வாரத்தின் முதல் நாள் காலையில், அதிக இருட்டோடே, மகதலேனா மரியாள் கல்லறையினிடத்திற்கு வந்து கல்லறையை அடைத்திருந்த கல் எடுத்துப் போட்டிருக்கக் கண்டாள். உடனே அவள் ஓடி, சீமோன் பேதுருவினிடத்திலும் இயேசுவுக்கு அன்பாயிருந்த மற்றச் சீஷனிடத்திலும் போய்: கர்த்தரைக் கல்லறையிலிருந்து எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள், அவரை வைத்த இடம் எங்களுக்குத் தெரியவில்லை என்றாள்.

யோவான் 20:1,2

இருட்டோடு இருட்டாக மகதலேனா மரியாள் மட்டும் வந்து கல்லறையில் இயேசுவின் உடல் காணாமல் போனதைப் பார்த்ததாக யோவான் கூறுகிறார்.

கல்லறையில் இயேசு காணாமல் போனதைக் கண்டவர் மகதலேனா மரியாள் மட்டுமா? அல்லது இரண்டு மரியாள்களா? அல்லது இரண்டு மரியாள்களுடன் சலாமே என்னும் பெண்ணும் ஆக மூவரா? அல்லது அநேக பெண்கள் கூட்டமா? இவற்றுள் எது சரி? தக்க ஆதாரம் இல்லாமல் ஆளாளுக்கு கற்பனை செய்து கூறியதால் தான் இப்படி முரண்படுகின்றனர்.

## சிலுவையில் அறையப்பட்ட நேரம் எது?

எந்த ஒரு நிகழ்ச்சியை நம்புவதற்கும், நிரூபிப்பதற்கும் அது நிகழ்ந்த நேரம் பற்றிய தகவல் முக்கியமானதாகும். அதில் முரண்பாடு ஏற்பட்டால் அந்தச் சம்பவம் நிரூபணமாகாது. இயேசு சிலுவையில் அறையப்பட்ட நேரம் என்ன என்ற முக்கியமான விஷயம் குறித்து பைபிளில் காணப்படும் முரண்பாடு அதில் சந்தேகத்தை ஏற்படுத்துகிறது.

அவரைச் சிலுவையில் அறைந்த போது மூன்றாம் மணி வேளையாயிருந்தது.

மாற்கு 15:26

இயேசு மூன்றாம் மணி நேரத்தில் சிலுவையில் அறையப்பட்டார் என்று மாற்கு கூறுகிறார்.

மாற்கு கூறுவதைப் பொய்யாக்கும் வகையில் யோவான் கூறுவதைக் கேளுங்கள்!

அந்த நாள் பஸ்காவுக்கு ஆயத்த நாளும் ஏறக்குறைய ஆறுமணி நேரமுமாயிருந்தது; அப்பொழுது அவன் யூதர்களை நோக்கி: இதோ, உங்கள் ராஜா என்றான். அவர்;கள்: இவனை அகற்றும் அகற்றும் சிலுவையில் அறையும் என்று சத்தமிட்டார்கள். அதற்குப் பிலாத்து: உங்கள் ராஜாவை நான் சிலுவையில் அறையலாமா என்றான். பிரதான ஆசாரியர்; பிரதியுத்தரமாக: இராயனேயல்லாமல் எங்களுக்கு வேறே ராஜா இல்லை என்றார்கள். அப்பொழுது அவரைச் சிலுவையில் அறையும்படிக்கு அவர்களிடத்தில் ஒப்புக் கொடுத்தான். அவர்கள் இயேசுவைப் பிடித்துக் கொண்டு போனார்கள்.

யோவான் 19:14,15,16

மூன்று மணிக்கு இயேசு சிலுவையில் அறையப்பட்டார் என்றால் அவரது விசாரணை அதற்கு முன்பு நடந்திருக்க வேண்டும். ஆனால் இயேசு ஆறு மணிக்கு பிலாத்துவின் முன்னிலையில் விசாரிக்கப்பட்டுக் கொண்டிருக்கிறார். ஆறு மணிக்கு விசாரிக்கப்பட்டவர் அதற்கு முன்பு எப்படிச் சிலுவையில்

அறையப்பட முடியும். சிலுவையில் அறையப்பட்டவரை எழுப்பி பிலாத்து விசாரித்தாரா?

ஆறாம் மணி நேரமுதல் ஒன்பதாம் மணி நேரம் வரைக்கும் பூமியெங்கும் அந்தகாரம் உண்டாயிற்று. ஒன்பதாம் மணி நேரத்தில் இயேசு: ஏலி! ஏலி! லாமா சபக்தானி, என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார்; அதற்கு என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர் என்று அர்த்தமாம்.

மத்தேயு 27:45,46

ஆறாம் மணி நேர முதல் ஒன்பதாம் மணி நேரம் வரைக்கும் பூமியெங்கும் அந்தகாரம் உண்டாயிற்று. ஒன்பதாம் மணி நேரத்திலே இயேசு: எலோயீ! எலோயீ! லாமா சபக்தானி என்று மிகுந்த சத்தமிட்டுக் கூப்பிட்டார். அதற்கு: என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்; என்று அர்த்தமாம்.

மாற்கு 15:33,34

அப்பொழுது ஏறக்குறைய ஆறாம் மணி நேரமாயிருந்தது; ஒன்பதாம் மணி நேரம் வரைக்கும் பூமியெங்கும் அந்தகாரமுண்டாயிற்று. சூரியன் இருளடைந்தது, தேவாலயத்தின் திரைச்சீலை நடுவில் இரண்டாகக் கிழிந்தது. இயேசு: பிதாவே, உம்முடைய கைகளில் என் ஆவியை ஒப்புவிக்கிறேன் என்று மகா சத்தமாய்க் கூப்பிட்டுச் சொன்னார்; இப்படிச் சொல்லி, ஜீவனை விட்டடார்.

லூக்கா 23:44-46

ஆறு மணி முதல் ஒன்பது மணி வரை இருள் ஏற்பட்டதாகவும் ஒன்பதாம் மணி நேரத்தில் இயேசு உயிரை விட்டதாகவும் மத்தேயுவும் மாற்குவும், லூக்காவும் கூறுகிறார்கள்.

அதாவது எந்த நேரத்தில் இயேசு பிலாத்துவின் முன்னிலையில் விசாரிக்கப்பட்டுக் கொண்டு இருந்தாரோ அந்த நேரத்தில் இயேசு சிலுவையில் தொங்கிக் கொண்டிருந்தார் என்று இம்மூவரும் கூறுகிறார்கள்.

சிலுவையில் அறையப்பட்ட நேரத்தில் காணப்படும் முரண்பாடு இந்த நிகழ்ச்சியில் ஏற்படும் சந்தேகத்தை மேலும் அதிகப்படுத்துகிறது.

## கல்லைப் புரட்டியதில் முரண்பாடு

ஓய்வு நாள் முடிந்து, வாரத்தின் முதலாம் நாள் விடிந்து வருகையில், மகதலேனா மரியாளும் மற்ற மரியாளும் கல்லறையைப் பார்க்க வந்தார்கள். அப்பொழுது, பூமி மிகவும் அதிரும்படி, கர்த்தருடைய தூதன் வானத்திலிருந்திறங்கி வந்து, வாசலிலிருந்த கல்லைப் புரட்டித் தள்ளி, அதின் மேல் உட்கார்ந்தான்.

மத் 28:1,2

வாரத்தின் முதல் நாளில் மகதலேனா மரியாளும் மற்ற மரியாளும் வந்த போது அவர்கள் பார்க்கும் விதத்தில் அவர்கள் முன்னிலையில் வானத்தில் இருந்து தேவ தூதன் இறங்கி கல்லைப் புரட்டி அதன் மேல் உட்கார்ந்ததாக மத்தேயு கூறுகிறார். மாற்குவும் இந்தக் கருத்தை கூறுகிறார்.

கல்லறையை அடைத்திருந்த கல்புரட்டித் தள்ளப்பட்டிருக்கிறதைக் கண்டு,

லூக்கா 24:2

ஆனால் மூன்று பெண்களும் வந்த போது முன்னரே கல் புரட்டப்பட்டதைக் கண்டதாக லூக்கா கூறிகிறார்.

வாரத்தின் முதல் நாள் காலையில், அதிக இருட்டோடே, மகதலேனா மரியாள் கல்லறையினிடத்திற்கு வந்து கல்லறையை அடைத்திருந்த கல் எடுத்துப் போட்டிருக்கக் கண்டாள்.

யோவான் 20:1

மகதலேனா மரியாள் இருட்டோடு வந்த போது கல்லறையை அடைத்திருந்த கல் எடுத்து போட்டிருக்கக் கண்டதாக யோவான் கூறுகிறார்.

இந்தப் பெண்கள் வரும் போது கல்லறையின் மீது கல் வைக்கப்பட்டு அவர்கள் வந்த பிறகு புரட்டப்பட்டதா? முன்னரே புரட்டப்பட்டிருந்ததா? எது உண்மை? ஏன் இதத் தடுமாற்றம்?

கல்லறைக்கு பெண்கள் வந்த நேரம் எது?

ஓய்வு நாள் முடிந்து, வாரத்தின் முதலாம் நாள் விடிந்து வருகையில், மகதலேனா மரியாளும் மற்ற மரியாளும் கல்லறையைப் பார்க்க வந்தார்கள்.

மத் 28:1

வாரத்தின் முதலாம் நாளில் விடிந்து வரும்போது இரண்டு மரியாள்களும் கல்லறைக்கு வந்ததாக மத்தேயு கூறுகிறார்.

வாரத்தின் முதலாம் நாள் அதிகாலையிலே தாங்கள் ஆயத்தம் பண்ணின கந்தவர்க்கங்களை அவர்கள் எடுத்துக் கொண்டு வேறு சில ஸ்திரிகளோடுங் கூடக் கல்லறையினிடத்தில் வந்தார்கள்.

லூக்கா 24:1

அதிகாலையில் என லூக்கா கூறுகிறார்.

வாரத்தின் முதலாம் நாள் அதிகாலையிலே சூரியன் உதயமாகிற போது கல்லறையினிடத்தில் வந்து,

மாற்கு 16:2

சூரியன் உதயமாகிற போது என்று மாற்கு கூறுகிறார்.

சூரியன் உதிக்கும் போது என்பதும் அதிகாலை என்பது ஒன்று தான் என்று இதற்கு விளக்கம் கூற முடியும்.

ஆனால் யோவான் அதிக இருட்டோட என்று கூறுகிறார்.

வாரத்தின் முதல் நாள் காலையில், அதிக இருட்டோடே, மகதலேனா மரியாள் கல்லறையினிடத்திற்கு வந்து கல்லறையை அடைத்திருந்த கல் எடுத்துப் போட்டிருக்கக் கண்டாள்.

யோவான் 20:1

அதிக இருட்டான நேரத்தை சூரியன் உதயமாகும் போது என்று யாரும் கூற மாட்டார்கள்.

**சுகந்தவர்க்கம் இடுவதிலும் முரண்பாடு**

ஒரு உடலை அடக்கம் செய்யும் போது அதற்கு வாசனைத் திரவியங்கள் பூசி அடக்கம் செய்ய வேண்டும் என்பது யூத மதத்தின் படி செய்ய வேண்டிய சடங்காகும்.

இந்தச் சடங்கைச் செய்யாமல் இயேசுவின் உடல் அடக்கம் செய்யப்பட்டதால் அந்த உடலுக்கு பூச வேண்டிய நறுமனத்தை வாங்கிக் கொண்டு அதைப் பூசுவதற்காகவே மூன்று பெண்களும் வந்ததாக மாற்கு கூறுகிறார்.

ஓய்வு நாளான பின்பு மகதலேனா மரியாளும், யாக்கோபின் தாயாகிய மரியாளும், சலோமே என்பவளும், அவருக்குச் சுகந்தவர்க்கமிடும்படி அவைகளை வாங்கிக் கொண்டு.

மாற்கு 16:1

கல்லறையையும் அது வைக்கப்பட்ட விதத்தையும் பார்த்து விட்டு நறுமணம் பூசப்படவில்லை எனபதைக் கண்டு நறுமணப் பொருளை வாங்கிக் கொண்டு அநேகம் பெண்கள் வந்ததாக லூக்கா கூறுகிறார்.

கலிலேயாவிலிருந்து அவருடனே கூட வந்திருந்த ஸ்திரிகளும் பின்சென்று, கல்லறையையும் அவருடைய சரீரம் வைக்கப்பட்ட விதத்தையும் பார்த்து, திரும்பிப் போய், கந்தவர்க்கங்களையும் பரிமள தைலங்களையும் ஆயத்தம் பண்ணி, கற்பனையின்படியே ஓய்வு நாளில் ஓய்ந்திருந்தார்கள்.

லூக்கா 23:55,56

மத்தேயு நறுமணம் பற்றிப் பேசவில்லை.

ஆனால் யோவான் கூறும் போது இயேசுவை அடக்கம் செய்யும் போதே நூறு ராத்தல் நறுமணப் பொருள் பூசி யூதமதச் சடங்குகள் செய்து அடக்கம் செய்யப்பட்டார் எனக் கூறுகிறார்.

ஆரம்பத்திலே ஒரு இராத்திரியில் இயேசுவினிடத்தில் வந்திருந்த நிக்கொதேமு என்பவன் வெள்ளைப்போளமும் கரியபோளமும் கலந்து ஏறக்குறைய நூறு இராத்தல் கொண்டு வந்தான். அவர்கள் இயேசுவின் சரீரத்தை எடுத்து, யூதர்கள் அடக்கம் பண்ணும் முறைமையின்படியே அதைச் சுகந்தவர்க்கங்களுடனே சீலைகளில் சுற்றிக் கட்டினார்கள்.

யோவான் 19:39,40

இயேசு அடக்கம் செய்யப்படும் போது அவருக்கு உரிய மதச் சடங்குகள் செய்யப்பட்டனவா? இல்லையா? அந்தப் பெண்கள் அந்தச் சடங்குகலைச் செய்ய வந்தார்களா? வெறும் பார்வையாளராக வந்தார்களா? ஏன் இந்த முரண்பாடு? இதில் எது உண்மை?

இயேசுவின் உடலுக்கு நறுமணம் பூசவில்லை என்பதை அப்பெண்கள் கண்டு நறுமணப் பொருள்களைப் பூச நினைத்தால் இரண்டு நாள் கழித்துத் தான் அதைச் செய்வார்களா? உடனடியாக அதைச் செய்திருக்க மாட்டார்களா? என்ற கேள்வியும் இதில் மேலதிகமாக எழுகின்றது.

## ஒரு தேவதூதனா? இரண்டு தேவதூதர்களா? அல்லது யாருமே இல்லையா?

இரண்டு மரியாள்கள் கல்லறைக்கு வந்த போது ஒரு தேவதூதன் கல்லறைக்கு மேல் உட்கார்ந்திருந்ததாக மத்தேயு மாற்கு ஆகிய இருவரும் கூறுகிறார்கள்.

தன் வானத்திலிருந்திறங்கி வந்து, வாசலிலிருந்த கல்லைப் புரட்டித் தள்ளி, அதின் மேல் உட்கார்ந்தான். அவனுடைய ரூபம் மின்னல் போலவும், அவனுடைய வஸ்திரம் உறைந்த மழையைப் போல வெண்மையாகவும் இருந்தது.

மத் 28:2,3

அவர்கள் கல்லறைக்குள் பிரவேசித்து, வெள்ளையங்கி தரித்தவனாய் வலது பக்கத்தில் உட்கார்ந்திருந்த ஒரு வாலிபனைக் கண்டு பயந்தார்கள். அவன் அவர்களை நோக்கி: பயப்படாதிருங்கள், சிலுவையில் அறையப்பட்ட நசரேயனாகிய இயேசுவைத் தேடுகிறீர்கள்; அவர் உயிர்த்தெழுந்தார்; அவர் இங்கேயில்லை; இதோ, அவரை வைத்த இடம்.

மாற்கு 16:5,6

ஆனால் லூக்கா கூறும் போது இரண்டு தேவதூதர்கள் இருந்ததாகக் கூறுகிறார்.

அதைக் குறித்து மிகுந்த கலக்கமடைந்திருக்கையில், பிரகாசமுள்ள வஸ்திரந்தரித்த இரண்டு பேர் அவர்கள் அருகே நின்றார்கள்.

லூக்கா 24:4

மகதலேனா மரியாள் கல்லறைக்கு வந்த போது தேவதூதன் யாரும் இருந்ததாக யோவான் கூறவில்லை.

வாரத்தின் முதல் நாள் காலையில், அதிக இருட்டோடே, மகதலேனா மரியாள் கல்லறையினிடத்திற்கு வந்து கல்லறையை அடைத்திருந்த கல் எடுத்துப் போட்டிருக்கக் கண்டாள். உடனே அவள் ஓடி, சீமோன் பேதுருவினிடத்திலும் இயேசுவுக்கு அன்பாயிருந்த மற்றச் சீஷனிடத்திலும் போய்: கர்த்தரைக்

கல்லறையிலிருந்து எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள், அவரை வைத்த இடம் எங்களுக்குத் தெரியவில்லை என்றாள்.

யோவான் 20:1,2

இயேசுவின் உடலைக் காணவில்லை என்று சீடர்களை அழைத்து வந்து காட்டிய பிறகு தான் இரண்டு தேவதூதர்களை மகதலேனா பார்த்ததாகவும் யோவான் கூறுகிறார்.

மேலும் இயேசு மரித்தோரில் இருந்து உயிர்த்தெழுந்தார் என்று தேவதூதன் அல்லது தேவதூதர்கள் கல்லறைக்கு வந்த பெண்களிடம் கூறியதாக மூன்று சுவிஷேசம் கூறும் போது யோவான் அதற்கு முரணாகக் கூறுகிறார். இயேசுவின் உடலை யாரோ கடத்திக் கொண்டு போய் விட்டார்கள் என்று அவர் நினைத்து மற்றவர்களிடம் போய்ச் சொன்னதாகக் கூறுகிறார்.

இவர்களில் யார் சொல்வது உண்மை?

## சீடர்களுக்கு அறிவித்ததில் முரண்பாடு

இயேசுவின் கல்லறை அருகில் இருந்த இரண்டு தூதர்கள் இரண்டு மரியாள்களிடமும் இயேசு உயிர்த்தெழுந்த செய்தியை சீடர்களுக்குச் சொல்லும் படியும் இயேசுவை கலிலேயா எனும் ஊரில் சந்திப்பீர்கள் என்றும் சீடர்களிடம் கூறச் சொன்னதாக மத்தேயு கூறுகிறார். மாற்குவும் (16:7) இதைக் கூறுகிறார்.

அவர் இங்கே இல்லை; தாம் சொன்னபடியே உயிர்த்தெழுந்தார்; கர்த்தரை வைத்த இடத்தை வந்து பாருங்கள்; சீக்கிரமாய்ப் போய், அவர் மரித்தோரிலிருந்து எழுந்தார் என்று அவருடைய சீஷர்களுக்குச் சொல்லுங்கள். அவர் உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போகிறார்; அங்கே அவரைக் காண்பீர்கள்; இதோ, உங்களுக்குச் சொன்னேன் என்றான். அவர்கள் பயத்தோடும் மகா சந்தோஷத்தோடும் கல்லறையை விட்டுச் சீக்கிரமாய்ப் புறப்பட்டு, அவருடைய சீஷர்களுக்கு அறிவிக்க ஓடினார்கள்.

மத் 28:6,7,8

நீங்கள் அவருடைய சீஷரிடத்திற்கும் பேதுருவினிடத்திற்கும் போய்; உங்களுக்கு முன்னே கலிலேயாவுக்குப் போகிறார், அவர் உங்களுக்குச் சொன்னபடியே அங்கே அவரைக் காண்பீர்கள் என்று, அவர்களுக்குச் சொல்லுங்கள் என்றான். நடுக்கமும் திகிலும் அவர்களைப் பிடித்தபடியால், அவர்கள் சீக்கிரமாய் வெளியே வந்து, கல்லறையை விட்டு ஓடினார்கள்; அவர்கள் பயந்திருந்தபடியினால் ஒருவருக்கும் ஒன்றும் சொல்லாமற் போனார்கள்.

(மாற்கு 16:7,8)

தேவதூதர்கள் சொன்ன படி அந்தப் பெண்கள் சீடர்களுக்கு அதை அறிவித்தார்கள் என்று மத்தேயு கூறுகிறார், ஆனால் அவர்கள் பயந்திருந்ததால் சீடர்களுக்கு அறிவிக்கவில்லை எனக் கூறி மத்தேயுவுடன் முரண்படுகிறார்.

## சீடர்கள் வந்த நோக்கம்

இயேசுவின் உடலை யாரோ கடத்திச் சென்று விட்டார்களா என்பதைப் பார்க்க சீடர்கள் ஓடி வந்தார்களா? இயேசு உயிர்த்தெழுந்ததை உறுதி செய்வதற்காக வந்தார்களா என்பதிலும் முரண்பாடு உள்ளது.

இயேசு உயித்தெழுந்தார் என்று தூதர்கள் கூறியதை அந்தப் பெண்கள் சீடர்களிடம் கூறிய போது சீடர்கள் அதை நம்பவில்லை எனவும், அதை உறுதி செய்வதற்காக பேதுரு கல்லறைக்கு வந்ததாக லூக்கா கூறுகிறார்.

இவர்களுடைய வார்த்தைகள் அவர்களுக்கு வீண் பேச்சாகத் தோன்றினதினால், அவர்கள் இவர்களை நம்பவில்லை. பேதுருவோ எழுந்திருந்து, கல்லறையினிடத்திற்கு ஓடி, அதற்குள்ளே குனிந்து பார்க்கையில், சீலைகளைத் தனிப்பட வைத்திருக்கக் கண்டு, சம்பவித்ததைக் குறித்துத் தன்னில் ஆச்சரியப்பட்டுக் கொண்டு போனான்.

லூக்கா 24:11,12

ஆனால் யோவான் இது பற்றிக் கூறும் போது இயேசுவின் உடலை யாரோ கடத்திக் கொண்டு போய்விட்டதாக மகதலேனா மரியாள் சொன்னதை உறுதி செய்யவே பேதுருவும் இன்னொரு சீடரும் வந்ததாகக் கூறுகிறார்.

உடனே அவள் ஓடி, சீமோன் பேதுருவினிடத்திலும் இயேசுவுக்கு அன்பாயிருந்த மற்றச் சீஷனிடத்திலும் போய்: கர்த்தரைக் கல்லறையிலிருந்து எடுத்துக் கொண்டு போய்விட்டார்கள், அவரை வைத்த இடம் எங்களுக்குத் தெரியவில்லை என்றாள். அப்பொழுது பேதுருவும் மற்றச் சீஷனும் கல்லறையினிடத்திற்குப் போகும்படி புறப்பட்டு, இருவரும் ஒருமித்து ஓடினார்கள்.

யோவான் 20:2,3

**சீடர்களைப் பார்க்காமல் மேலுலகம் சென்றாரா? பார்த்தபின் சென்றாரா?**

கலிலேயா என்ற ஊரில் சீடர்களைச் சந்திக்கவிருப்பதாக அந்தப் பெண்கள் மூலம் தூதர்கள் சொல்லி அனுப்பினார்கள் என்று மூன்று சுவிஷேசங்கள் கூறுகின்றன.

இவர்கள் மூவருக்கும் மாற்றமாக யோவான் மகதலேனா மரியாளுக்கு காட்சி தந்த இயேசு அவர் பார்த்துக் கொண்டு இருக்கும் போதே மேலுலகம் ஏறிச் சென்றதாகவும் இதை சீடர்களிடம் தெரிவிக்குமாறு இயேசு கூறியதாகவும் குறிப்பிடுகிறார்.

இயேசு அவளை நோக்கி: என்னைத் தொடாதே, நான் இன்னும் என் பிதாவினிடத்திற்கு ஏறிப் போகவில்லை; நீ என் சகோதரரிடத்திற்குப் போய், நான் என் பிதாவினிடத்திற்கும் உங்கள் பிதாவினிடத்திற்கும், என் தேவனிடத்திற்கும் உங்கள் தேவனிடத்திற்கும் ஏறிப் போகிறேன் என்று அவர்களுக்குச் சொல்லு என்றார். மகதலேனா மரியாள் போய், தான் கர்த்தரைக் கண்டதையும், அவர் தன்னுடனே சொன்னவைகளையும் சீஷருக்கு அறிவித்தாள்.

யோவான் 20:18

அதாவது இயேசு உயிர்த்தெழுந்த பின் மகதலேனா மரியாளுக்கு காட்சி தந்தவுடன் மேலுலகம் ஏறிச் சென்று விட்டார் என்கிறார்.

**இயேசுவைத் தரிசித்தவர் எத்தனை பேர்?**

இயேசு கல்லறையில் இருந்து உயிர்த்தெழுந்த பின் அவரைச் சந்தித்தவர்கள் குறித்த தகவலிலும் முரண்பாடுகள் காணப்படுகின்றன.

இயேசு உயிர்த்தெழுந்தவுடன் இரண்டு மரியாள்கள் முன்னே தோன்றி அவர்களுக்கு இயேசு காட்சி தந்தார் என்று மத்தேயு கூறுகிறார்.

அவர்கள் அவருடைய சீஷர்களுக்கு அறிவிக்கப் போகிற போது, இயேசு தாமே அவர்களுக்கு எதிர்ப்பட்டு: வாழ்க என்றார். அவர்கள் கிட்ட வந்து, அவர் பாதங்களைத் தழுவி, அவரைப் பணிந்து கொண்டார்கள்.

மத் 28:9

மாற்குவின் கூற்றுப்படி மகதலேனா மரியாளுக்கு மட்டும் இயேசு தரிசனமானார்.

வாரத்தின் முதலாம் நாள் அதிகாலையிலே இயேசு எழுந்திருந்த பின்பு, மகதலேனா மரியாளுக்கு முதல் முதல் தரிசனமானார்;.

மாற்கு 16:9

இரண்டில் எது உண்மை?

## மரிக்காத சீடன் மரித்தது ஏன்?

இயேசு மேலுலகம் சென்ற பின் மீண்டும் வந்து சிலருக்கு காட்சி தந்தார் என்று யோவான் கூறுகிறார். இதை மற்ற சுவிஷேசக்காரர்கள் கூறவில்லை. அவ்வாறு அவர் தரிசனம் தந்த போது ஒரு சீடன் தன் பின்னே வருவதைக் கண்டார். இது குறித்து யோவான் கூறும் போது

பேதுரு திரும்பிப் பார்த்து, இயேசுவுக்கு அன்பாயிருந்தவனும், இராப்போஜனம் பண்ணுகையில் அவர் மார்பிலே சாய்ந்து: ஆண்டவரே, உம்மைக் காட்டிக் கொடுக்கிறவன் யார் என்று கேட்டவனுமாகிய சீஷன் பின்னே வருகிறதைக் கண்டான். அவனைக் கண்டு, பேதுரு இயேசுவை நோக்கி: ஆண்டவரே, இவன் காரியம் என்ன என்றான். அதற்கு இயேசு: நான் வருமளவும் இவனிருக்க எனக்குச் சித்தமானால், உனக்கென்ன, நீ என்னைப் பின்பற்றிவா என்றார். ஆகையால் அந்தச் சீஷன் மரிப்பதில்லையென்கிற பேச்சு சகோதரருக்குள்ளே பரம்பிற்று. ஆனாலும், அவன் மரிப்பதில்லையென்று இயேசு சொல்லாமல், நான் வருமளவும் இவனிருக்க எனக்குச் சித்தமானால் உனக்கென்னவென்று சொன்னார்;. அந்தச் சீஷனே இவைகளைக் குறித்துச் சாட்சி கொடுத்து இவைகளை எழுதினவன்; அவனுடைய சாட்சி மெய்யென்று அறிந்திருக்கிறோம்.

(யோவான் 21:20-24)

அவன் மரிப்பதில்லை என்பதற்கும் இயேசு வரும் வரை அவன் உயிரோடு இருப்பான் என்பதற்கும் ஒரே அர்த்தம் தான். ஆனால் இயேசு வரும் வரை இருப்பான் என்று சொல்லப்பட்ட அந்தச் சீடன் எங்கேயும் காணோமே? அவன் இருந்திருந்தால் இரண்டாயிரம் வயதுடையவனாக இருக்க வேண்டும். இரண்டாயிரம் ஆண்டுகளாக வசிக்கும் அந்த மனிதன் எங்கே இருக்கிறான்? அப்படி யாரும் இல்லாவிட்டால் இயேசு கூறியதாக யோவான் கூறியது பொய்யாகிவிடும். இது பொய் என்றால் அவர் கூறிய ஒட்டு மொத்த சம்பவமும் சந்தேகத்துக்கு உரியதாகி விடும்.

## உயிர்த்தெழுந்த பரிசுத்தவான்கள்

இயேசு சிலுவையில் அறையப்பட்டவுடன் அனைத்துக் கல்லறைகளும் திறக்கப்பட்டு அதில் நித்திரை அடைந்திருந்த அநேகரின் உடல்களும் கல்லறையை விட்டு வெளியேறியதாக பைபிள் கூறுகிறது.

கல்லறைகளும் திறந்தது நித்திரையடைந்திருந்த அநேக பரிசுத்தவான்களுடைய சரீரங்களும் எழுந்திருந்தது.

மத் 27:52

அவர் உயிர்த்தெழுந்த பின்பு இவர்கள் கல்லறைகளை விட்டுப் புறப்பட்டு பரிசுத்த நகரத்தில் பிரவேசித்து அநேகருக்குக் காணப்பட்டார்கள்.

மத் 27:53

மனிதர்களின் பாவத்தைச் சுமப்பதற்காக இயேசு தன்னைத் தானே பலி கொடுத்ததால் மரணித்த பின் உயிர்த்தெழுந்தார் என்று பவுலின் கொள்கை கூறுகிறது. ஆனால் மத்தேயுவோ இது ஒரு சாதாரண சம்பவம் என்கிறார்.

இயேசு மட்டும் இல்லாமல் இன்னும் அநேகர் கல்லறையை விட்டு வெளியேறியதாகவும் இயேசுவைப் பார்த்தவர்களை விட அநேகர் இதைப் பார்த்த்தாகவும் கூறுகிறார்.

இறந்த பின் உயிர்த்தெழுதல் என்று ஒன்று இருந்தால் அது இயேசுவுக்கும் மட்டும் உள்ள சிறப்புத் தகுதி இல்லை என்பதே பைபிள் கூறும் தத்துவம். மனிதர்களின் பாவங்களைச் சுமக்க தன்னைத் தானே பலியிட்டுக் கொண்டதால் உயிர்த்தெழுந்தார் என்பது கட்டுக் கதை என்பது இதில் இருந்து உறுதியாகிறது.

இயேசு மூன்றால் நாளில் உயிர்த்தெழுந்ததை விட பரிசுத்தவான்கள் உயிர்த்தெழுந்தது தான் அதிக ஆச்சரியமானதாகும். ஏனெனில் இறந்து பல ஆண்டுகள் கடந்தவர்களும் அவர்களில் இருப்பார்கள். மூன்றாம் நாளில் எழுவதை விட மக்கி மண்ணோடு மண்ணாகிப் போனவர்கள் எழுந்தது தான் அதிக ஆச்சரியம்.

## இரத்தமும் சதையும்

இயேசு மீண்டும் உயிர்த்து எழுந்து தனது சீடர்களுக்கு காட்சி தந்திருந்தால் அவர் ஆவியாகத் தான் இருக்க முடியும். ஆனால் சீடர்களுக்கு அவர் காட்சி தந்த போது உடலுடன் காட்சி தந்தது மட்டுமின்றி நான் ஆவி அல்ல என்றும் கூறி இருக்கிறார் என்று பைபிள் கூறுகிறது.

இவைகளைக் குறித்து அவர்கள் பேசிக் கொண்டிருக்கையில் இயேசு தாமே அவர்கள் நடுவிலே நின்று: உங்களுக்குச் சமாதானம் என்றார். அவர்கள் கலங்கி பயந்து ஒரு ஆவியைக் காண்கிறதாக நினைத்தார்கள். அவர் அவர்களை நோக்கி: நீங்கள் ஏன் கலங்குகிறீர்கள்; உங்கள் இருதயங்களில் சந்தேகங்கள் எழும்புகிறதென்ன? நான் தான் என்று அறியும்படி என் கைகளையும் என் கால்களையும் பாருங்கள். என்னைத் தொட்டுப் பாருங்கள்;. நீங்கள் காண்கிறபடி எனக்கு மாம்சமும் எலும்புகளும் உண்டாயிருக்கிறது போல ஒரு ஆவிக்கு இராதே என்று சொல்லி தம்முடைய கைகளையும் கால்களையும் அவர்களுக்குக் காண்பித்தார். ஆனாலும் சந்தோஷத்தினால் அவர்கள் இன்னும் விசுவாசியாமல் ஆச்சரியப்படுகையில்: புசிக்கிறதற்கு ஏதாகிலும் இங்கே உண்டா என்று அவர்களிடத்தில் கேட்டார். அப்பொழுது பொரித்த மீன் கண்டத்தையும் தேன்கூட்டுத் துணிக்கையையும் அவருக்குக் கொடுத்தார்கள். அவைகளை அவர் வாங்கி அவர்களுக்கு முன்பாகப் புசித்து அவர்களை நோக்கி: மோசேயின் நியாயப்பிரமாணத்திலும் தீர்க்கதரிசிகளின் ஆகமங்களிலும் சங்கீதங்களிலும் என்னைக் குறித்து எழுதியிருக்கிறவைகளெல்லாம் நிறைவேற வேண்டியதென்று நான் உங்களோடிருந்த போது உங்களுக்குச் சொல்லிக் கொண்டு வந்த விசேஷங்கள் இவைகளே என்றார்.

லூக்கா 24:36-44

தனக்கு எலும்பும் சதையும் இருப்பதைக் காட்டி தான் ஆவி அல்ல என்று இயேசு நிரூபிக்கிறார். மேலும் மீனையும் தேனையும் சாப்பிட்டு விட்டு அதன் மூலம் தான் ஆவியல்ல என்று நிரூபித்துக் காட்டுகிறார்.

இதில் இருந்து தெரிய வருவது என்ன? இயேசு சிலுவையில் அறையப்படாமல் சாபத்துக்கு உரிய அந்த மரணத்தில் இருந்து தப்பித்து ஓடி வந்துள்ளார் என்பது உறுதியாகிறது.

**களவாடப்பட்ட இயேசுவின் உடல்**

இயேசு சிலுவையில் அரையப்பட்ட காலத்தில் அவர் உயிர்த்தெழுந்தார் என்ற நம்பிக்கை மக்களிடம் இருக்கவில்லை. மாறாக அவரது உடலை அவரது சீடர்கள் திருடிச் சென்று விட்டு அவர் மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார் என்றும் சீடர்களுக்குக் காட்சி தந்தார் என்று கதை கட்டியதாகவும் தான் அன்றைய மக்கள் நம்பினார்கள்.

அப்பொழுது இயேசு அவர்களை நோக்கி: பயப்படாதிருங்கள்; நீங்கள் போய் என் சகோதரர் கலிலேயாவுக்குப்போகும்படி அவர்களுக்குச் சொல்லுங்கள்; அங்கே அவர்கள் என்னைக் காண்பார்கள் என்றார்.

மத்தேயு 28:10

அவர்கள் போகையில் காவல் சேவகரில் சிலர் நகரத்துக்குள்ளே வந்து நடந்த யாவற்றையும் பிரதான ஆசாரியருக்கு அறிவித்தார்கள்.

மத்தேயு 28:11

இவர்கள் மூப்பரோடே கூடி வந்து ஆலோசனை பண்ணி சேவகருக்கு வேண்டிய பணத்தைக் கொடுத்து.

மத்தேயு 28:12

நாங்கள் நித்திரை பண்ணுகையில் அவனுடைய சீஷர்கள் இராத்திரியிலே வந்து அவனைக் களவாய்க் கொண்டு போய் விட்டார்கள். என்று சொல்லுங்கள்.

மத்தேயு 28:13

இது தேசாதிபதிக்குக் கேள்வியானால் நாங்கள் அவரைச் சம்மதப்படுத்தி உங்களைத் தப்புவிப்போம் என்றார்கள்.

மத்தேயு 28:14

அவர்கள் பணத்தை வாங்கிக் கொண்டு தங்களுக்குப் போதிக்கப்பட்டபடியே செய்தார்கள். இந்தப் பேச்சு யூதருக்குள்ளே இந்நாள் வரைக்கும் பிரசித்தமாயிருக்கிறது.

மத்தேயு 28:15

மக்கள் அப்படி பேசிக் கொண்டதை மறுக்க முடியாத சுவிஷேசக்காரர்கள் யூதர்கள் பணம் வாங்கிக் கொண்டு இவ்வாறு கதை கட்டியதாக எழுதி வைத்துள்ளனர்.

உடலைக் காணவில்லை என்பது யதார்த்தமான உண்மை. இதைக் கூறுவதற்கு யாரும் பணம் கொடுக்க மாட்டார்கள். செத்தவர் உயிர்த்தெழுந்தார் என்பது இயற்கைக்கு மாறானது. ஆதாரமற்றது. இதைக் கூறுவதற்குத் தான் பணம் கைமாறி இருக்கும். சிலருக்குப் பணம் கொடுத்து இயேசு உயிர்த்தெழுந்தார் என்று கதை கட்டி விட்டு உண்மையைப் பொய்யாகச் சித்தரிக்கிறார்கள.

இயேசு உயிர்த்து எழுந்திருந்தால் அவரது குடும்பத்துப் பெண்கள் சிலருக்கும் அவரது சீடர்களுக்கும் மட்டும் காட்சி தந்திருக்க மாட்டார். எந்த மக்கள் அவரைச் சந்தேகப்பட்டு பொய்க் குற்றச்சாட்டு சுமத்தி சிலுவையில் அறைந்து கொலை செய்தார்களோ அவர்கள் நம்பும் வகையில் அனைத்து மக்கள் மத்தியிலும் அவர் தோன்றி இருக்க வேண்டும். அப்படித் தோன்றி இருந்தால் சீடர்கள் உடலைக் களவாடிச் சென்று விட்டனர் என்று யூதர்கள் கருதி இருக்க மாட்டார்கள்.

இதுவும் உயிர்த்து எழுந்தது கட்டுக் கதை என்பதை நிரூபிக்கின்றது.

## செத்தவர் உடலில் இரத்தம்

சிலுவையில் அறையப்பட்டது குறித்த மற்றொரு தகவலும் சந்தேகத்தை ஏற்படுத்துகிறது.

அவர்கள் இயேசுவினிடத்தில் வந்து அவர் மரித்திருக்கறதைக் கண்டு அவருடைய கால் எழும்புகளை முறிக்கவில்லை. ஆகிலும் போர்ச் சேவகர்களில் ஒருவன் ஈட்டியினாலே அவருடைய விலாவிலே குத்தினான். உடனே இரத்தமும் தண்ணீரும் புறப்பட்டது.

யோவான் 19:33,34

கிறித்தவ நம்பிக்கையின் படி-பைபிளின் கூற்றுப்படி- இயேசு சாதாரணமாக மரிக்கவில்லை. சிலுவையில் அறையப்பட்டு மரணிக்கிறார். இவ்வாறு சிலுவையில் அறையப்பட்டதனால் அவரது உடலிலிருந்த இரத்தம் முழுமையாக வெளியேறி இருக்கும். அதன் பின்னர் அவர் மரித்து விட்டதால் ஏதேனும் இரத்தம் அவர் உடலில் மீதமிருந்தால் அதுவும் உறைந்து போயிருக்கும்.

இவ்வாறு இருக்கும் போது இறந்து போன இயேசுவின் உடலில் ஈட்டியால் குத்திய போது அவர்து உடலில் இருந்து இரத்தம் வெளிப்பட்டது என்று யோவான்கூறுவதும் இதில் சந்தேகத்தை அதிகப்படுத்துகிறது.

## சீடர்களுக்கு இயேசு கூறியது பொய்யானது ஏன்

இயேசு சீடர்களுக்குக் காட்சி தந்த போது அவர் கூறியதாக மாற்கு எழுதியதை ஆதாரமாகக் கொண்டு கிறித்தவ போதகர்கள் பிசாசுகளை விரட்டுவதாகவும் நோய்களைப் போக்குவதாகவும் கூறி ஏமாற்றி வருகின்றனர். இதற்கு அவர்கள் காட்டும் ஆதாரம் இது தான்.

விசுவாசிக்கிறவர்களால் நடக்கும் அடையாளங்களாவன: என் நாமத்தினாலே பிசாசுகளைத் துர்த்துவார்கள்;. நவமான பாஷைகளைப் பேசுவார்கள்;

மாற்கு 16:17

சர்ப்பங்களை எடுப்பார்கள்; சாவுக்கேதுவான யாதொன்றைக் குடித்தாலும் அது அவர்களைச் சேதப்படுத்தாது; வியாதிஸ்தர் மேல் கைகளை வைப்பார்கள் அப்பொழுது அவர்கள் சொஸ்தமாவார்கள் என்றார்.

மாற்கு 16:18

உயிர்த்தெழுந்த இயேசு மேற்கண்டவாறு கூறி இருந்தால் அது நிச்சயம் நடக்க வேண்டும். இயேசு பொய் கூற மாட்டார். கிறித்தவ மக்கள் இயேசு உயிர்த்தெழுந்து மேற்கண்டவாறு கூறியதை சோதித்துப் பார்க்க வேண்டும். விஷத்தைக் குடித்தாலும் போதகர்கள் சாக மாட்டார்கள் என்று இதில் கூறப்படுகிறது.

இதை அடிப்படையாகக் கொண்டு நாம் விஷத்தைக் கொண்டு வருகிறோம். அதை கிறித்தவ போதகர்கள் மக்கள் மத்தியில் குடித்துக் காட்டி சாகாமல் இருந்து காட்டத் தயாரா? ஒருவர் கூட இதற்குத் தயாராக இல்லாவிட்டால் இயேசு இப்படிக் கூறியிருக்க மாட்டார் என்பது உறுதியாகிறது. அவர் உயிர்த்தெழவில்லை என்பதும் உறுதியாகின்றது. இயேசு செத்த பின் உயிர்த்தெழவில்லை என்பதற்கு இதையே அறைகூவலாக கிறித்தவ போதகர்களுக்கு நாம் முன் வைக்கிறோம்.

### பர்னபா சுவிஷேசம்

பைபிளின் நான்கு சுவிஷேசங்கள் போல் இன்னும் பலரும் எழுதினார்கள். பவுல் உண்டாக்கிய கோட்பாட்டுக்கு அவை சம்மட்டி அடியாக இருந்ததால் அவற்றை வேத புத்தகத்தில் இருந்து கிறித்தவர்கள் நீக்கி விட்டனர். அவற்றுள் முக்கியமானது பர்னபா என்பவர் எழுதிய சுவிஷேசமும் ஒன்றாகும்.

பர்னபா சுவிஷேசம் மற்ற அனைத்து சுவிஷேசங்களில் இருந்தும் சிறப்புற்றதாகும். ஏனெனில் மற்ற சுவிஷேசக்காரர்கள் இயேசுவின் நேரடிச் சீடர்களாக இருக்கவில்லை. இது குறித்து முன்னர் விளக்கப்பட்டுள்ளது. ஆனால் பர்னபா இயேசுவின் நேரடிச் சீடராக இருந்தார். இயெசுவைச் சிலுவையில் அறையத் தேடிய போது என்ன நடந்தது என்பதை இவர் நேரடியாகப் பார்த்தவர்.

நான்கு சுவிஷேசம் எழுதியவர்களும் அப்போது நடந்ததை தாங்கள் நேரடியாகப் பார்த்ததாகக் கூறவில்லை. கேள்விப்பட்டதையும் யூகித்ததையும் தான் எழுதினார்கள். ஆனால் பர்னபா, நான் சம்பவத்தை நேரடியாகப் பார்த்தவன் என்று கூறுகிறார்.

கீழே நாம் எடுத்துக் காட்டிய மேற்கோளில் இருந்தும் இவர் இயேசுவின் சீடர் என்பதை அறியலாம்.

நாங்கள் அனைவரும் அவன் இயேசுவென்று நினைக்கும் நிலைக்கு ஆகிவிட்டது என்று பர்னபா கூறுகிறார். தன்னையும் மற்ற சீடர்களையும் உள்ளடக்கி நாங்கள் அனைவரும் நினைத்தோம் என்று கூறுகிறார். இவர் இயேசுவின் நேரடியான சீடர் என்பதற்கு இதுவே சான்று.

இவரது சுவிஷேசத்தை வேதப் புத்தகத்தில் இருந்து தூக்கி வீசியது போல் இவரையும் பன்னிரண்டு சீடர்களில் இருந்து தூக்கி விட்டனர். இவரை இயேசுவின் சீடரான மாற்குவின் சீடர் என்று ஒரு படி இறக்கி விட்டனர்.

பர்னபா என்பவர் பவுல் காலத்தில் அவருடன் இணைந்து போதனை செய்தவர். பரிசுத்த ஆவியால் நிரப்பப்பட்டவர். இயேசு சிலுவையில் அறையப்படவில்லை

என்று இவர் எழுதிய சுவிஷேசம் கூறுவதால் இவரது சுவிஷேசத்தை வேதப்புத்தகத்தில் இருந்து நீக்கி விட்டனர்.

பர்னபா பற்றி பைபிளில் காணப்படும் குறிப்புகள் அவரது முக்கியத்துவத்தை உணர்த்துகின்றன.

அப்பொழுது பர்னபா என்பவன் அவனைச் சேர்த்துக் கொண்டு, அப்போஸ்தலரிடத்தில் அழைத்துக் கொண்டு போய், வழியிலே அவன் கர்த்தரைக் கண்ட விதத்தையும், அவர் அவனுடனே பேசினதையும், தமஸ்குவில் அவன் இயேசுவின் நாமத்தினாலே தைரியமாய்ப் பிரசங்கித்ததையும் அவர்களுக்கு விவரித்துச் சொன்னான்.

அப்போஸ்தலர் நடபடிகள் 9:27

எருசலேமிலுள்ள சபையார் இந்தக் காரியங்களைக் குறித்துக் கேள்விப்பட்ட போது, அந்தியோகியா வரைக்கும் போகும்படிக்குப் பர்னபாவை அனுப்பினார்கள். அவன் போய்ச் சேர்ந்து, தேவனுடைய கிருபையைக் கண்ட போது, சந்தோஷப்பட்டு, கர்த்தரிடத்தில் மனநிர்ணயமாய் நிலைத்திருக்கும்படி எல்லாருக்கும் புத்தி சொன்னான். அவன் நல்லவனும், பரிசுத்த ஆவியினாலும் விசுவாசத்தினாலும் நிறைந்தவனுமாயிருந்தான்; அநேக ஜனங்கள் கர்த்தரிடமாய்ச் சேர்க்கப்பட்டார்கள். பின்பு பர்னபா சவுலைத் தேடும்படி, தர்சுவுக்குப் புறப்பட்டுப் போய், அவனைக் கண்டு, அந்தியோகியாவுக்கு அழைத்துக் கொண்டு வந்தான். அவர்கள் ஒரு வருஷகாலமாய்ச் சபையோடே கூடியிருந்து, அநேக ஜனங்களுக்கு உபதேசம் பண்ணினாட்;கள். முதல் முதல் அந்தியோகியாவிலே சீஷர்களுக்குக் கிறிஸ்தவர்கள் என்கிற பேர் வழங்கிற்று.

(அப்போஸ்தலர் நடபடிகள் 11:21-26)

அந்தியோகியா பட்டணத்திலுள்ள சபையிலே பர்னபாவும், நீகர் என்னப்பட்ட சிமியோனும், சிரேனே ஊரானாகிய லுகியும், காற்பங்கு தேசாதிபதியாகிய ஏரோதுடனே கூட வளர்க்கப்பட்ட மனாயீனும், சவுலும், தீர்க்கதரிசிகளாயும் போதகர்களாயும் இருந்தார்கள். அவர்கள் கர்த்தருக்கு ஆராதனை செய்து,

உபவாசித்துக் கொண்டிருக்கிற போது: பர்னபாவையும் சவுலையும் நான் அழைத்த ஊழியத்துக்காக அவர்களைப் பிரித்து விடுங்கள் என்று பரிசுத்த ஆவியானவர் திருவுளம்பற்றினார்.

அப்போஸ்தலர் நடபடிகள் 13:1,2

அவன் விவேகமுள்ள மனுஷனாகிய செர்கியுபவுல் என்னும் அதிபதியுடனே கூட இருந்தான். அந்த அதிபதி பர்னபாவையும் சவுலையும் அழைப்பித்து, அவர்களிடத்தில் தேவ வசனத்தைக் கேட்க ஆசையாயிருந்தான்.

அப்போஸ்தலர் நடபடிகள் 13:7

ஜெப ஆலயத்தில் கூடின சபை கலைந்து போன பின்பு, யூதரிலும் யூத மார்க்கத்தமைந்த பக்தியுள்ளவர்களிலும் அநேகர் பவுலையும் பர்னபாவையும் பின்பற்றினார்கள். அவர்களுடனே இவர்கள் பேசி, தேவனுடைய கிருபையிலே நிலை கொண்டிருக்கும்படி அவர்களுக்குப் புத்தி சொன்னார்கள்.

அப்போஸ்தலர் நடபடிகள் 13:43

அடுத்த ஓய்வு நாளிலே கொஞ்சங்குறையப் பட்டணத்தாரனைவரும் தேவ வசனத்தைக் கேட்கும்படி கூடி வந்தார்கள். யூதர்கள் ஜனக் கூட்டங்களைக் கண்ட போது பொறாமையினால் நிறைந்து, பவுலினால் சொல்லப்பட்டவைகளுக்கு எதிரிடையாய்ப் பேசி, விரோதித்துத் தூஷித்தார்கள். அப்பொழுது பவுலும் பர்னபாவும் தைரியங்கொண்டு அவர்களை நோக்கி: முதலாவது உங்களுக்கே தேவ வசனத்தைச் சொல்ல வேண்டியதாயிருந்தது; நீங்களோ அதைத் தள்ளி, உங்களை நித்தியஜீவனுக்கு அபாத்திரராகத் தீர்த்துக் கொள்ளுகிற படியினால், இதோ, நாங்கள் புறஜாதியரிடத்தில் போகிறோம். நீர் பூமியின் கடைசி பரியந்தமும் இரட்சிப்பாயிருக்கும்படி உம்மை ஜாதிகளுக்கு ஒளியாக வைத்தேன் என்கிற வேத வாக்கியத்தின்படி கர்த்தர் எங்களுக்குக் கட்டளையிட்டிருக்கிறபடியினால் இப்படிச் செய்கிறோம் என்றார்கள்.

அப்போஸ்தலர் நடபடிகள் 13:44-47

பவுலும் பர்னபாவும் அந்தியோகியாவிலே சஞ்சரித்து, வேறே அநேகரோடுங் கூடக் கர்த்தருடைய வசனத்தை உபதேசித்துப் பிரசங்கித்துக் கொண்டிருந்தார்கள். சில நாளைக்குப் பின்பு பவுல் பர்னபாவை நோக்கி: நாம் கர்த்தருடைய வசனத்தை அறிவித்திருக்கிற சகல பட்டணங்களிலுமுள்ள சகோதரர்கள் எப்படியிருக்கிறார்களென்று போய்ப் பார்ப்போம் வாரும் என்றான். அப்பொழுது பர்னபா என்பவன் மாற்கு என்னும் பேர் கொண்ட யோவானைக் கூட அழைத்துக் கொண்டு போக வேண்டும் என்றான்.

(அப்போஸ்தலர் நடபடிகள் 15:37)

பவுலோ: அவன் பம்பிலியா நாட்டிலே நம்மை விட்டுப் பிரிந்து நம்மோடே கூட ஊழியத்துக்கு வராததினாலே, அவனை அழைத்துக் கொண்டு போகக் கூடாது என்றான். இதைப் பற்றி அவர்களுக்குள்ளே கடுங்கோபமூண்டபடியினால் அவர்கள் ஒருவரையொருவர் விட்டுப் பிரிந்தார்கள். பர்னபா மாற்குவைக் கூட்டிக் கொண்டு கப்பல் ஏறிச் சீப்புரு தீவுக்குப் போனான். பவுலோ சீலாவைத் தெரிந்து கொண்டு, சகோதரராலே தேவனுடைய கிருபைக்கு ஒப்புவிக்கப்பட்டு, புறப்பட்டு, சீரியாவிலும் சிலிசியாவிலும் திரிந்து, சபைகளைத் திடப்படுத்தினான்.

அப்போஸ்தலர் நடபடிகள் 15:38-41

பதினாலு வருஷம் சென்ற பின்பு, நான் தீத்துவைக் கூட்டிக் கொண்டு பர்னபாவுடனே கூட மறுபடியும் எருசலேமுக்குப் போனேன்.

கலாத்தியர் 2:1

எனக்கு அளிக்கப்பட்ட கிருபையை அறிந்த போது, தூண்களாக எண்ணப்பட்ட யாக்கோபும், கேபாவும், யோவானும், தாங்கள் விருத்தசேதனமுள்ளவர்களுக்கும், நாங்கள் புறஜாதிகளுக்கும் பிரசங்கிக்கும்படி, அந்நியோந்நிய ஐக்கியத்திற்கு அடையாளமாக எனக்கும் பர்னபாவுக்கும் வலதுகை கொடுத்து, தரித்திரரை நினைத்துக் கொள்ளும்படிக்கு

மாத்திரம் சொன்னார்கள்; அப்படிச் செய்யும்படி அதற்கு முன்னமே நானும் கருத்துள்ளவனாயிருந்தேன்.

கலாத்தியர் 2:9,10

பவுலுக்கு நிகராகவும் அவரை விட மேலாகவும் இருந்த பர்னபா எழுதிய சுவிஷேசத்தில் சிலுவை மரணம் குறித்து பின்வருமாறு கூறுகிறார்.

## பர்னபாஸின் சுவிசேஷம் (ஆங்கிலத்தின் தமிழாக்கம்)

பர்னபாஸின் சுவிஷேசம் 222 அதிகாரங்களைக் கொண்டது. இதில் இயேசுவை சிலுவையில் அறைவதற்காக எதிரிகள் திட்டமிட்ட போது என்ன நடந்தது என்பதை 215 முதல் பர்னபா விரிவாக விளக்குகிறார். அதில் 215, 216 217 ஆகிய அதிகாரங்களை மட்டும் கீழே தருகிறோம்.

215. When the soldiers with Judas drew near to the place where Jesus was, Jesus heard the approach of many people, wherefore in fear he withdrew into the house. And the eleven were sleeping.

Then God, seeing the danger of his servant, commanded Gabriel, Michael, Rafael, and Uriel, his ministers, to take Jesus out of the world.

The holy angels came and took Jesus out by the window that looketh toward the South. They bare him and placed him in the third heaven in the company of angels blessing God for evermore..

இயேசு நின்ற இடத்திற்கு அருகே யூதாசும் படையாளிகளும் வந்தடைந்த போது இயேசு ஜனங்களின் ஆரவாரத்தைக் கேட்டார். வீட்டிலிருந்து வெளியேறிச் சென்றார். பயத்தின் காரணமாக அவர் வீட்டிற்குள் பின்வாங்கிச் சென்றார். பதினொரு அப்போஸ்தலர்களும் அப்போது நித்திரையிலிருந்தனர்.

அப்பொழுது கர்த்தர் தன் ஊழியக்காரனுக்கு ஆபத்து ஏற்பட்டுள்ளதை அறிந்து, தன்னுடைய மந்திரிகளாகிய கப்ரியேல், மீக்காயேல், ராஃபேல், உரியேல் என்போருக்கு இயேசுவைப் பூலோகத்திலிருந்து புறமே எடுத்துவிடும் படிக்குக் கட்டளையிட்டார்.

தெற்குப் பக்கமாக திறந்திருக்கும் சாளரம் வழியாக இயேசுவை தேவ ஊழியர்கள் வெளியே எடுத்தார்கள். அவரையும் கொண்டு அவர்கள் கர்த்தரின் அருள் என்றைக்கும் நிலைத்து நிற்கக் கூடிய தேவ ஊழியக்காரர்கள் தங்கியிருக்கக் கூடிய மூன்றாவது வானத்துக்குக் கொண்டு சென்றார்கள்.

216. Judas entered impetuously before all into the chamber whence Jesus had been taken up. And the disciples were sleeping. Whereupon the wonderful God acted wonderfully, insomuch that Judas was so changed in speech and in face to be like Jesus that we believed him to be Jesus. And he, having awakened us, was seeking where the Master was. Whereupon we marvelled, and answered: Thou, Lord, art our master; hast thou now forgotten us?

And he, smiling, said: Now are ye foolish, that know not me to be Judas Iscariot!

And as he was saying this the soldiery entered, and laid their hands upon Judas, because he was in every way like to Jesus.

We having heard Judas saying, and seeing the multitude of soldiers, fled as beside ourselves.

And John, who was wrapped in a linen cloth, awoke and fled, and when a soldier seized him by the linen cloth he left the linen cloth and fled naked. For God heard the prayer of Jesus, and saved the eleven from evil..

இயேசு எடுக்கப்பட்ட உடனே யூதாஸ் மற்றவர்கள் முன்னிலையில் அறைக்குள் சாடிச் சென்றான். அப்போது எல்லா அப்போஸ்தலர்களும் நித்திரை கொண்டிருந்தனர். அப்பொழுது அற்புதங்களை உடைய கர்த்தர் அற்புதத்தை நிகழ்த்தினார்! யூதாசின் உரையாடலும் அவனது முகமும் இயேசுவினுடையது

போல ஆயிற்று! நாங்கள் அனைவரும் அவன் இயேசுவென்று நினைக்கும் நிலைக்கு ஆகிவிட்டது! எங்களை எழுப்பி அவன் குரு எங்கே என்று தேடினான். அப்பொழுது நாங்கள் வியப்புடன் அவனுக்குப் பதில் கூறினோம் ஆண்டவரே! தாங்கள் தானே எங்களுக்கு குருவானவர், இப்போது எங்களை மறந்து விட்டீர்களா? அவன் புன்னகைத்துக் கொண்டு கூறினான்: நான்தான் யூதாஸ் இஸ்காரியாத், இதனைப் புரியாத நீங்கள் இப்போது அறிவீனர்களே!

இப்படிக் கூறிக் கொண்டிருக்கையில் படையாட்கள் உள்ளே நுழைந்தனர். முற்றிலும் இயேசுவைப் போல மாறிவிட்டிருந்த யூதாசைப் பிடித்துக் கொண்டார்கள். எங்களைச் சுற்றியிருந்த படையாட்களுக்கு இடையில் நாங்கள் ஓடுகையில் யூதாஸ் கூறிக் கொண்டிருந்ததை நாங்கள் கேட்டோம். நார்ப்பட்டுத் துணியால் தன்னைப் போர்த்தியிருந்த யோவான் எழுந்து ஓடிய போது ஒரு படையாள் நார்ப்பட்டுத் துணியைப் பிடித்த போது, அவர் அதை விட்டு விட்டு ஆடையின்றித் தப்பி ஓடினார்! இயேசுவின் வேண்டுதலுக்கு கர்த்தர் செவிகொடுத்து, பதினொன்று பேரும் தீமையிலிருந்து காப்பாற்றப்பட்டார்கள்.

217. The soldiers took Judas and bound him, not without derision. For he truthfully denied that he was Jesus; and the soldiers, mocking him, said: Sir, fear not, for we are come to make thee king of Israel, and we have bound thee because we know that thou dost refuse the kingdom.

Judas answered: Now have ye lost your senses! Ye are come to take Jesus of Nazareth, with arms and lanterns as [against] a robber; and ye have bound me that have guided you, to make me king!

படையாட்கள் யூதாசைப் பலவந்தமாகப் பிடித்து வைத்திருந்தனர். அவனோ தான் இயேசு அல்ல என்று மறுத்துக் கொண்டிருந்தான். படையாட்கள் அவனைப் பரிகசித்துக் கொண்டு சொன்னார்கள், ஐயா, தாங்கள் பயப்பட வேண்டாம், தங்களை இஸ்ரவேலரின் மன்னராக ஆக்குவதற்கு நாங்கள்

வந்திருக்கிறோம். அரசாட்சியை தாங்கள் மறுப்பீர்கள் என்பது எங்களுக்குத் தெரியும். அதனால் தான் உங்களைப் பிடித்து வைத்துள்ளோம்!

இப்போது நீங்கள் உங்கள் மதியை இழந்து விட்டீர்கள். நீங்கள் ஒரு திருடனைப் (பிடிப்பது) போல் நாஸரேத்துடைய இயேசுவைப் பிடிப்பதற்காக ஆயுதங்கள் மற்றும் விளக்குகளுடன் வந்துள்ளீர்கள். உங்களுக்கு வழிகாட்டிய என்னையே அரசனாக்குவதற்காக நீங்கள் பிடித்து வைத்துள்ளீர்கள் என்று யூதாஸ் பதிலளித்தான்.

இது குறித்து கிறித்தவ குருமார்கள் பதில் அளிக்கும் போது பர்னபா சுவிஷேசம் என்பது முஸ்லிம்களின் கற்பனை என்ற ரெடிமேட் பதிலைக் கூறுவதை வழக்கமாகக் கொண்டுள்ளனர். ஆனால் இதர்கு அவர்கள் எவ்வித ஆதாரத்தையும் காட்டுவதில்லை.

பர்னபாவின் சுவிஷேசத்தை கிறித்தவ குருமார்கள் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் அவர்கள் ஏற்றுக் கொண்ட ஆதாரங்கள் மூலமே சிலுவைப் பலி சித்தாந்தம் தவிடு பொடியாகியுள்ளதை மறுக்க முடியாது.

## இயேசுவைப் பற்றி திருக்குர்ஆன்

கிறித்தவ நண்பர்களே! இயேசு எந்தக் கொள்கையைப் பிரச்சாரம் செய்தாரோ அந்த ஓரிறைக் கொள்கை உங்கள் மத குருமார்களின் தவறான வழிகாட்டுதலின் காரணமாக, முழுமையாகப் புறக்கணிக்கப்பட்டு விட்டது. இயேசு கிறிஸ்துவுக்கும், கிறிஸ்தவக் கொள்கைக்கும் எந்தவிதச் சம்மந்தமுமில்லாத அளவுக்கு இயேசுவும் புறக்கணிக்கப்பட்டு விட்டார்.

நாம் இது வரை எடுத்துக் காட்டிய பைபிள் வசனங்களிலிருந்தே இதை நீங்கள் அறிந்து கொள்ளலாம்.

அப்படியானால் இயேசு போதித்த அந்தக் கொள்கையை எங்கே தேடுவது? எப்படிப் பின்பற்றுவது?

கிறித்தவ மார்க்கத்தின் எந்தப் பிரிவினரிடமும் இயேசு வலியுறுத்திப் பிரச்சாரம் செய்த ஓரிறைக் கொள்கையை நிச்சயமாக நீங்கள் காண முடியாது.

ஏலீ ஏலீ லாமா சபக்தானி - என் தேவனே! என் தேவனே! ஏன் என்னைக் கைவிட்டீர்? என்று இயேசு இறுதிக் கட்டத்தில் சப்தமிட்டதாகப் பைபிள் கூறுகிறது.

அதை உறுதியாக நீங்கள் நம்புகிறீர்கள்.

நான் தேவனல்லன் என்றும்

என்னால் என்னைக் காத்துக் கொள்ள இயலாது என்றும்

என்னைப் படைத்த தேவனின் சித்தப்படியே யாவும் நடக்கும் என்றும்

இந்த வாக்கு மூலத்தின் மூலம் இயேசு தெளிவுபடுத்தி விட்டார்.

(உங்கள் நம்பிக்கைப்படி) இயேசுவின் கடைசி மூச்சு அடங்கிய நேரத்திலும் இயேசு வலியுறுத்திய இந்தக் கொள்கையை நீங்கள் காற்றில் பறக்க விட்டு விட்டீர்கள்.

இயேசுவின் உயிர் மூச்சாகத் திகழ்ந்த இந்த ஓரிறைக் கொள்கையை அவர் போதித்த அதே வடிவில் நீங்கள் பின்பற்ற விரும்பினால் இஸ்லாத்தில் உங்களை இணைத்துக் கொள்வதைத் தவிர வேறு வழியே இல்லை.

ஆம்! இஸ்லாத்தின் வேத நூலாகிய திருக்குர்ஆன் இயேசு போதித்த அதே கொள்கையை மிகத் தெளிவாக வழிமொழிகின்றது.

யூதர்கள் இயேசுவின் மீதும் அவரது தாயார் மேரியின் மீதும் சுமத்திய களங்கத்தைக் குர்ஆன் முழுமையாகத் துடைத்தெறிகின்றது.

இயேசுவுக்குக் கடவுள் தன்மை இருக்கவில்லை என்பதைக் கூறும் அதே நேரத்தில் அவருக்கு வழங்கப்பட்ட சிறப்புக்களையும் திருக்குர்ஆன் தெளிவாகக் கூறுகின்றது.

முஹம்மத் நபியவர்கள் எப்படி தேவனின் செய்தியை மக்களுக்குத் தெரிவிக்க வந்த தூதராக இருந்தார்களோ அது போலவே இயேசுவும் தூதராக இருந்தார் என்பதையும் திருக்குர்ஆன் விளக்குகின்றது.

கிறித்தவ நண்பர்களே! உங்கள் சிந்தனையைத் தூண்டும் வகையில் இயேசுவைக் குறித்த திருக்குர்ஆனின் வசனங்கள் சிலவற்றை உங்கள் முன் வைக்கிறோம்.

## இயேசு தந்தையின்றிப் பிறந்தார்

மர்யமே! அல்லாஹ் தன் வார்த்தை பற்றி உமக்கு நற்செய்தி கூறுகிறான். மர்யமின் மகனான ஈஸா எனும் மஸீஹ் என்பது அவரது பெயர். இவ்வுலகிலும், மறுமையிலும் தகுதிமிக்கவராகவும், (இறைவனுக்கு) நெருக்கமானவராகவும் இருப்பார் என்று வானவர்கள் கூறியதை நினைவூட்டுவீராக! . அவர் தொட்டில் பருவத்திலும், இளமையிலும் மக்களிடம் பேசுவார். நல்ல வராகவும் இருப்பார் (என்றும் கூறினர்( . இறைவா! எந்த ஆணும் என்னைத் தொடாத நிலையில் எனக்கு எவ்வாறு குழந்தை உருவாகும்? என்று அவர் கேட்டார். தான் நாடியதை அல்லாஹ் இவ்வாறே படைக்கிறான். ஏதேனும் ஒரு காரியம் பற்றி அவன் முடிவு

செய்து விட்டால் ஆகு என்பான். உடனே அது ஆகி விடும் என்று (இறைவன்) கூறினான்.

திருக்குர்ஆன் 3:45,46,47

இவ்வேதத்தில் மர்யமைப் பற்றியும் நினைவூட்டுவீராக! தமது குடும்பத்தினரை விட்டு கிழக்குத் திசையில் உள்ள இடத்தில் அவர் தனித்திருந்தார். . அவர்களை விட்டும் ஒரு திரையை அவர் போட்டுக் கொண்டார். அவரிடம் நமது ரூஹை அனுப்பினோம். அவர் முழுமையான மனிதராக அவருக்குத் தோற்றமளித்தார். . நீர் இறையச்சமுடையவராக இருந்தால் உம்மை விட்டும் அளவற்ற அருளாளனிடம் நான் பாதுகாப்புத் தேடுகிறேன் என்று (மர்யம்) கூறினார். . நான், உமக்குப் பரிசுத்தமான புதல்வனை அன்பளிப்புத் தருவதற்காக (வந்த) உமது இறைவனின் தூதன் என்று அவர் கூறினார். . எந்த ஆணும் என்னைத் தீண்டாமலும், நான் நடத்தை கெட்டவளாக இல்லாமலும் இருக்க எனக்கு எப்படிப் புதல்வன் உருவாக முடியும்? என்று (மர்யம்) கேட்டார். அப்படித் தான் என்று (இறைவன்) கூறினான். இது எனக்கு எளிதானது. அவரை மக்களுக்குச் சான்றாகவும், நம் அருளாகவும் ஆக்குவோம். இது நிறைவேற்றப்பட வேண்டிய கட்டளை எனவும் உமது இறைவன் கூறினான் (என்று ஜிப்ரீல் கூறினார்.( . பின்னர் கருவுற்று அக்கருவுடன் தூரமான இடத்தில் ஒதுங்கினார்.

திருக்குர்ஆன் 19:17-21

## இயேசு இறைவனின் மகனல்லர்; தூதர் தான்

வேதமுடையோரே! உங்கள் மார்க்கத்தில் வரம்பு மீறாதீர்கள்! அல்லாஹ்வின் மீது உண்மையைத் தவிர (வேறெதனையும்) கூறாதீர்கள்! மர்யமின் மகன் ஈஸா (இயேசு) எனும் மஸீஹ் அல்லாஹ்வின் தூதரும் அவனது கட்டளையா(ல் உருவானவருமா)வார். அக்கட்டளையை அவன் மர்யமிடம் போட்டான். மேலும் அவனது உயிருமாவார். எனவே அல்லாஹ்வையும், அவனது தூதர்களையும் நம்புங்கள்! (கடவுள்) மூவர் எனக் கூறாதீர்கள்! விலகிக் கொள்ளுங்கள்! (அது) உங்களுக்குச் சிறந்தது. அல்லாஹ்வே ஒரே வணக்கத்திற்குரியவன். அவனுக்குப் பிள்ளை இருப்பதை விட்டும் அவன் தூயவன். வானங்களில் உள்ளவையும், பூமியில் உள்ளவையும் அவனுக்கே உரியன. அல்லாஹ் பொறுப்பேற்கப் போதுமானவன் . (இயேசு எனும்)மஸீஹும், நெருக்கமான வானவர்களும் அல்லாஹ்வுக்கு அடிமையாக இருப்பதிலிருந்து விலகிக் கொள்ள மாட்டார்கள். அவனுக்கு அடிமையாக இருப்பதிலிருந்து விலகிப் பெருமையடிப்போர் அனைவரையும் அவன் தன்னிடம் ஒன்று திரட்டுவான்.

திருக்குர்ஆன் 4:171, 172

மர்யமுடைய (மேரியுடைய) மகன் மஸீஹ் (எனும் இயேசு) தான் அல்லாஹ் என்று கூறியோர் (ஏக இறைவனை) மறுத்து விட்டனர். மர்யமின் மகன் மஸீஹையும், அவரது தாயாரையும், பூமியில் உள்ள அனைவரையும் அல்லாஹ் அழிக்க நாடினால் அவனிடமிருந்து (அதைத் தடுக்க) சிறிதளவேனும் சக்தி பெற்றவர் யார்? என்று நீர் கேட்பீராக! வானங்கள், பூமி மற்றும் அவற்றுக்கு இடைப்பட்டவைகளின் ஆட்சி அல்லாஹ்வுக்கே உரியது. அவன் நாடியதைப் படைப்பான். அல்லாஹ் அனைத்துப் பொருட்களின் மீதும் ஆற்றலுடையவன்.

திருக்குர்ஆன் 5:17

மர்யமின் (மேரியின்) மகன் மஸீஹ் தான் அல்லாஹ் எனக் கூறியவர்கள் (ஏக இறைவனை) மறுத்து விட்டனர். இஸ்ராயீலின் மக்களே! என் இறைவனும், உங்கள் இறைவனுமாகிய அல்லாஹ்வை வணங்குங்கள்! அல்லாஹ்வுக்கு

இணை கற்பிப்போருக்கு சொர்க்கத்தை அல்லாஹ் தடை செய்து விட்டான். அவர்கள் சென்றடையும் இடம் நரகம். அநீதி இழைத்தோருக்கு எந்த உதவியாளர்களும் இல்லை என்றே மஸீஹ் கூறினார். மூவரில் (மூன்று கடவுள்களில்) அல்லாஹ்வும் ஒருவன் என்று கூறியோர் (ஏக இறைவனை) மறுப்பவர்களாகி விட்டனர். ஒரே இறைவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் (வேறு) யாரு மில்லை. அவர்கள் தமது கூற்றிலிருந்து விலகிக் கொள்ளவில்லையானால் (ஏக இறைவனை) மறுப்போருக்குத் துன்புறுத்தும் வேதனை வந்தடையும்.

திருக்குர்ஆன் 5:72,73

மர்யமின் (மேரியின்) மகன் மஸீஹ் (எனும் இயேசு) (தூதரைத் தவிர வேறில்லை. அவருக்கு முன் பல தூதர்கள் சென்று விட்டனர். அவரது தாய் உண்மையாளர். அவ்விருவரும் உணவு உண்போராக இருந்தனர். இவர்களுக்குச் சான்றுகளை எவ்வாறு தெளிவுபடுத்தியுள்ளோம் என்பதைச் சிந்திப்பீராக! பின்னர் எவ்வாறு திசை திருப்பப்படுகின்றனர் என்பதையும் சிந்திப்பீராக!

திருக்குர்ஆன் 5:75

மர்யமின் (மேரியின்) மகன் ஈஸாவே! (இயேசுவே) அல்லாஹ்வையன்றி என்னையும், என் தாயாரையும் கடவுள்களாக்கிக் கொள்ளுங்கள்! என நீர் தான் மக்களுக்குக் கூறினீரா? என்று அல்லாஹ் (மறுமையில்) கேட்கும் போது, நீ தூயவன். எனக்குத் தகுதியில்லாத வார்த்தையை நான் கூற உரிமையில்லாதவன். நான் அவ்வாறு கூறியிருந்தால் அதை நீ அறிவாய். எனக்குள் உள்ளதை நீ அறிவாய்! உனக்குள் உள்ளதை நான் அறிய மாட்டேன். நீயே மறைவானவற்றை அறிபவன் என்று அவர் பதிலளிப்பார். . நீ எனக்குக் கட்டளையிட்டபடி எனது இறைவனும், உங்கள் இறைவனுமாகிய அல்லாஹ்வை வணங்குங்கள்! என்பதைத் தவிர வேறு எதையும் நான் அவர்களிடம் கூறவில்லை. நான் அவர்களுடன் இருக்கும் போது அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தேன். என்னை நீ கைப்பற்றியதும் நீயே அவர்களைக் கண்காணிப்பவனாக இருந்தாய். நீ அனைத்துப் பொருட்களையும்

கண்காணிப்பவன். அவர்களை நீ தண்டித்தால் அவர்கள் உனது அடியார்களே. அவர்களை நீ மன்னித்தால் நீ மிகைத்தவன்; ஞானமிக்கவன் (எனவும் அவர் கூறுவார்.)

திருக்குர்ஆன் 5:116-118

உஸைர் அல்லாஹ்வின் மகன் என்று யூதர்கள் கூறுகின்றனர். மஸீஹ் (இயேசு) அல்லாஹ்வின் மகன் என்று கிறித்தவர்கள் கூறுகின்றனர். இது வாய்களால் அவர்கள் கூறும் கூற்றாகும். இதற்கு முன் (ஏக இறைவனை) மறுத்தோரின் கூற்றுக்கு ஒத்துப் போகிறார்கள். அல்லாஹ் அவர்களை அழிப்பான். எவ்வாறு திசை திருப்பப்படுகின்றனர்? அவர்கள் அல்லாஹ்வையன்றி தமது மத போதகர்களையும், பாதிரிகளையும், மர்யமின் (மேரியின்) மகன் மஸீஹையும் கடவுள்களாக்கினர். ஒரே கடவுளை வணங்குமாறு தான் அவர்கள் கட்டளை யிடப்பட்டனர். அவனைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை. அவர்கள் இணை கற்பிப்பவற்றை விட்டும் அவன் தூயவன்.

திருக்குர்ஆன் 9:30,31

ஈஸா (இயேசு) தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்த போது ஞானத்தை உங்களிடம் கொண்டு வந்துள்ளேன். நீங்கள் முரண்பட்டதில் சிலவற்றை உங்களுக்குத் தெளிவுபடுத்துவேன். எனவே அல்லாஹ்வை அஞ்சுங்கள்! எனக்குக் கட்டுப்படுங்கள்! எனக் கூறினார். . அல்லாஹ்வே என் இறைவனும், உங்கள் இறைவனுமாவான். எனவே அவனையே வணங்குங்கள்! இதுவே நேர் வழி (என்றும் கூறினார்)

திருக்குர்ஆன் 43:63

அல்லாஹ்விடம் ஈஸாவுக்கு (இயேசுவுக்கு) உதாரணம் ஆதம் ஆவார். அவரை மண்ணால் படைத்து ஆகு என்று அவரிடம் கூறினான். உடனே அவர் ஆகி விட்டார். . இந்த உண்மை உம் இறைவனிடமிருந்து வந்தது. எனவே சந்தேகிப்பவராக நீர் ஆகாதீர்! . உமக்கு விளக்கம் வந்த பின் இது குறித்து உம்மிடம் யாரேனும் விதண்டா வாதம் செய்தால் வாருங்கள்! எங்கள்

பிள்ளைகளையும், உங்கள் பிள்ளைகளையும், எங்கள் பெண்களையும், உங்கள் பெண்களையும் அழைப்போம். நாங்களும் வருகிறோம். நீங்களும் வாருங்கள்! பின்னர் இறைவனிடம் இறைஞ்சி பொய்யர்கள் மீது அல்லாஹ்வின் சாபத்தைக் கேட்போம் எனக் கூறுவீராக! . இதுவே உண்மையான வரலாறாகும். அல்லாஹ்வைத் தவிர வணக்கத்திற்குரியவன் வேறு யாருமில்லை அல்லாஹ்வே மிகைத்தவன்; ஞானமிக்கவன். . நீங்கள் புறக்கணித்தால் குழப்பம் செய்வோரை அல்லாஹ் அறிந்தவன். . வேதமுடையோரே! நாம் அல்லாஹ்வைத் தவிர (யாரையும்) வணங்கக் கூடாது; அவனுக்கு இணையாக எதையும் கருதக் கூடாது; அல்லாஹ்வையன்றி நம்மில் ஒருவர் மற்றவரைக் கடவுள்களாக ஆக்கக் கூடாது என்ற எங்களுக்கும், உங்களுக்கும் பொதுவான கொள்கைக்கு வாருங்கள்! என்று கூறுவீராக! அவர்கள் புறக்கணித்தால் நாங்கள் முஸ்லிம்கள் என்பதற்கு நீங்களே சாட்சிகளாக இருங்கள்! எனக் கூறி விடுங்கள்!

திருக்குர்ஆன் 3:59-64

(அவன்) வானங்களையும், பூமியையும் முன்மாதிரியின்றி படைத்தவன். அவனுக்கு மனைவி இல்லாத நிலையில் அவனுக்கு எவ்வாறு பிள்ளை இருக்க முடியும்? அவனே எல்லாப் பொருட்களையும் படைத்தான். அவன் அனைத்துப் பொருட்களையும் அறிந்தவன்.

திருக்குர்ஆன் 6:101

அல்லாஹ் சந்ததியை ஏற்படுத்திக் கொண்டான் என்று கூறுகின்றனர். இதற்கு உங்களிடம் ஆதாரம் இல்லை. அவன் தூயவன். அவன் தேவையற்றவன். வானங்களில் உள்ளவையும், பூமியில் உள்ளவையும் அவனுக்கே உரியன. அல்லாஹ்வின் மீது நீங்கள் அறியாததை இட்டுக்கட்டிக் கூறுகின்றீர்களா? . அல்லாஹ்வின் மீது பொய்யை இட்டுக்கட்டுவோர் வெற்றி பெற மாட்டார்கள் என்று கூறுவீராக!

திருக்குர்ஆன் 10:68,69

சந்ததியை ஏற்படுத்திக் கொள்ளாத அல்லாஹ்வுக்கே புகழனைத்தும். ஆட்சியில் அவனுக்குப் பங்காளி இல்லை. உதவியாளன் எனும் இழிவும் அவனுக்கு இல்லை என்று (முஹம்மதே!) கூறுவீராக! அவனை அதிகம் பெருமைப்படுத்துவீராக!

திருக்குர்ஆன் 18:111

அளவற்ற அருளாளன் பிள்ளையை ஏற்படுத்திக் கொண்டான் என்று அவர்கள் கூறுகின்றனர்.

அபாண்டத்தையே கொண்டு வந்து விட்டீர்கள். அளவற்ற அருளாளனுக்குப் பிள்ளை இருப்பதாக அவர்கள் வாதிடு வதால் வானங்கள் வெடித்து, பூமி பிளந்து மலைகள் நொறுங்கி விடப் பார்க்கின்றன. . பிள்ளையை ஏற்படுத்திக் கொள்ளும் அவசியம் அளவற்ற அருளாளனுக்கு இல்லை. வானங்களிலும், பூமியிலும் உள்ள ஒவ்வொருவரும் அளவற்ற அருளாள னிடம் அடிமையாகவே வருவார்கள்.

திருக்குர்ஆன் 19:88-93

கவனத்தில் கொள்க! அல்லாஹ் (பிள்ளைகளைப்) பெற்றெடுத்தான் என்று அவர்கள் இட்டுக்கட்டியே கூறுகின்றனர். அவர்கள் பொய் கூறுபவர்கள்.

திருக்குர்ஆன் 37:151,152

அளவற்ற அருளாளனுக்குச் சந்ததி இருந்தால் அவரை நானே முதலில் வணங்குபவன் என (முஹம்மதே!) கூறுவீராக! . வானங்கள் மற்றும் பூமியின் இறைவனாகிய அர்ஷின் இறைவன் அவர்கள் கூறுவதை விட்டும் தூயவன்.

திருக்குர்ஆன் 43:81,82

அல்லாஹ் மகனை ஏற்படுத்திக் கொண்டான் எனக் கூறுகின்றனர். அவ்வாறில்லை! அவன் தூயவன். வானங்களிலும், பூமியிலும் உள்ளவை அவனுக்கே உரியன. அனைத்தும் அவனுக்கே அடிபணிகின்றன.

திருக்குர்ஆன் 2:116

அல்லாஹ் ஒருவன் என கூறுவீராக! . அல்லாஹ் தேவைகளற்றவன். . (யாரையும்) அவன் பெறவில்லை. (யாருக்கும்) பிறக்கவுமில்லை. . அவனுக்கு நிகராக யாருமில்லை.

திருக்குர்ஆன் 112:1-4

அவனுக்கே வானங்கள் மற்றும் பூமியின் அதிகாரம் உள்ளது. அவன் பிள்ளையை ஏற்படுத்திக் கொள்ளவில்லை. அதிகாரத்தில் அவனுக்கு எந்தப் பங்காளியும் இல்லை. அவன் ஒவ்வொரு பொருளையும் படைத்தான். அதைத் திட்டமிட்டு அமைத்தான்.

திருக்குர்ஆன் 25:2

## இயேசு கொல்லப்படவில்லை

அவர்கள் (ஏக இறைவனை) மறுத்ததாலும், மர்யமின் (மேரியின்) மீது மிகப் பெரும் அவதூறை அவர்கள் கூறியதாலும், அல்லாஹ்வின் தூதரான மர்யமின் மகன் மஸீஹ் எனும் ஈஸாவை (இயேசுவை) நாங்களே கொன்றோம் என்று அவர்கள் கூறியதாலும் (இறைவன் முத்திரையிட்டான்.) அவரை அவர்கள் கொல்லவில்லை. அவரைச் சிலுவையிலும் அவர்கள் அறையவில்லை. மாறாக அவர்களுக்கு ஆள் மாறாட்டம் செய்யப்பட்டது. இதில் முரண்பட்டோர் சந்தேகத்திலேயே உள்ளனர். ஊகத்தைப் பின்பற்றுவதைத் தவிர அவர்களுக்கு இது குறித்து அறிவு இல்லை. அவர்கள் அவரை உறுதியாகக் கொல்லவே இல்லை. மாறாக அவரை அல்லாஹ் தன்னளவில் உயர்த்திக் கொண்டான். அல்லாஹ் மிகைத்தவனாகவும், ஞானமுடையோனாகவும் இருக்கிறான். வேதமுடையோரில் ஒவ்வொருவரும் அவர் (இயேசு, மீண்டும் வந்து) மரணிப்பதற்கு முன் அவரை நம்பாமல் இருக்க மாட்டார்கள். கியாமத் நாளில் அவர் அவர்களுக்கு எதிரான சாட்சியாக இருப்பார்.

திருக்குர்ஆன் 4:156-159

(ஈஸாவின் எதிரிகள்) சூழ்ச்சி செய்தனர். அல்லாஹ்வும் சூழ்ச்சி செய்தான். அல்லாஹ் சிறப்பாகச் சூழ்ச்சி செய்பவன்.

திருக்குர்ஆன் 3:55

## சீடர்கள் காட்டிக் கொடுக்கவில்லை

அவர்களிடம் (இறை) மறுப்பை ஈஸா உணர்ந்த போது அல்லாஹ்வுக்காக எனக்கு உதவுவோர் யார்? என்று கேட்டார். (அவரது) அந்தரங்கத் தோழர்கள், நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்கள். அல்லாஹ்வை நம்பினோம். நாங்கள் முஸ்லிம்கள் என்பதற்கு நீங்களே சாட்சியாக இருங்கள் என்றனர். எங்கள் இறைவா! நீ அருளியதை நம்பினோம். இத்தூதரைப் பின்பற்றினோம். எங்களை இதற்கு சாட்சிகளாகப் பதிவு செய்து கொள்! (எனவும் கூறினர்) (ஈஸாவின்

எதிரிகள்) சூழ்ச்சி செய்தனர். அல்லாஹ்வும் சூழ்ச்சி செய்தான். அல்லாஹ் சிறப்பாகச் சூழ்ச்சி செய்பவன்.

திருக்குர்ஆன் 3:52-54

நம்பிக்கை கொண்டோரே! அல்லாஹ்வுக்காக எனக்கு உதவுபவர் யார் என்று மர்யமின் மகன் ஈஸா சீடர்களிடம் கேட்ட போது நாங்கள் அல்லாஹ்வின் உதவியாளர்கள் என்று சீடர்கள் கூறினர். அது போல் நீங்களும் அல்லாஹ்வின் உதவியாளர்களாக ஆகிவிடுங்கள்! இஸ்ராயீலின் மக்களில் ஒரு பிரிவினர் நம்பிக்கை கொண்டனர். மற்றொரு பிரிவினர் (நம்மை) மறுத்தனர். நம்பிக்கை கொண்டோரை அவர்களுடைய எதிரிகள் விஷயத்தில் பலப்படுத்தினோம். எனவே அவர்கள் வெற்றி பெற்றனர்.

திருக்குர்ஆன் 61:14

**இயேசுவுக்குச் சில அற்புதங்கள் வழங்கப்பட்டன**

இஸ்ராயீலின் மக்களுக்குத் தூதராகவும் (ஈஸாவை அனுப்பினான்.) உங்கள் இறைவனிடமிருந்து சான்றை நான் கொண்டு வந்துள்ளேன். உங்களுக்காககளிமண்ணால் பறவையின் வடிவம் அமைத்து, அதில் ஊதுவேன்; அல்லாஹ்வின் விருப்பப்படி அது பறவையாக ஆகும். அல்லாஹ்வின் விருப்பப்படி பிறவிக் குருடையும், குஷ்டத்தையும் நீக்குவேன்; இறந்தோரை உயிர்ப்பிப்பேன்; நீங்கள் உண்பதையும், உங்கள் வீடுகளில் நீங்கள் சேமித்து வைத்திருப்பதையும் உங்களுக்குக் கூறுவேன்; நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தால் இதில் உங்களுக்குச் சான்று உள்ளது (என்றார்)

திருக்குர்ஆன் 3:49

என் விருப்பப்படிகளிமண்ணால் பறவை வடிவத்தைப் படைத்து அதில் நீர் ஊதியதையும், என் விருப்பப்படி அது பறவையாக மாறியதையும், என் விருப்பப்படி பிறவிக் குருடரையும் வெண் குஷ்டமுடையவரையும் நீர் குணப்படுத்தியதையும் எண்ணிப் பார்ப்பீராக! இறந்தவர்களை என் விருப்பப்படி (உயிருடன்) வெளிப்படுத் தியதையும் எண்ணிப் பார்ப்பீராக! இஸ்ராயீலின்

மக்களிடம் தெளிவான சான்றுகளை நீர் கொண்டு வந்தீர்! அப்போது இது தெளிவான சூனியமேயன்றி வேறில்லை என்று அவர்களில் (ஏக இறைவனை) மறுப்போர் கூறிய போது, அவர்களிடமிருந்து நான் உம்மைக் காப்பாற்றியதையும் எண்ணிப் பார்ப்பீராக! என்று அல்லாஹ் (ஈஸாவிடம்) கூறியதை நினைவூட்டுவீராக!

திருக்குர்ஆன் 5:110

மர்யமின் மகன் ஈஸாவே! வானிலிருந்து உணவுத் தட்டை இறக்கிட உமது இறைவனுக்கு இயலுமா? என்று சீடர்கள் கூறிய போது, நீங்கள் நம்பிக்கை கொண்டிருந்தால் அல்லாஹ்வுக்கு அஞ்சுங்கள்! என்று அவர் கூறினார். . அதை உண்டு, எங்கள் உள்ளங்கள் அமைதி பெறவும், நீர் எங்களிடம் உண் மையே உரைத்தீர் என நாங்கள் அறிந்து, அதற்குச் சாட்சியாளர்களாக ஆகவும் விரும்புகிறோம் என்று அவர்கள் கூறினர். . அல்லாஹ்வே! எங்கள் இறைவா! வானிலிருந்து எங்களுக்கு உணவுத் தட்டை இறக்குவாயாக! அது எங்களில் முதலாமவருக்கும், எங்களில் கடைசியானவருக்கும் திருநாளாகவும், உன்னிடமிருந்து பெற்ற சான்றாகவும் இருக்கும். எங்களுக்கு உணவளிப்பாயாக! உணவளிப்போரில் நீயே சிறந்தவன் என்று மர்யமின் மகன் ஈஸா கூறினார். உங்களுக்கு அதை நான் இறக்குவேன். அதன் பிறகு உங்களில் யாரேனும் (என்னை) மறுத்தால் இவ்வுலகில் யாரையும் தண்டிக்காத அளவு அவரைத் தண்டிப்பேன் என்று அல்லாஹ் கூறினான்.

திருக்குர்ஆன் 5:112-115

அவர் தொட்டில் பருவத்திலும், இளமையிலும் மக்களிடம் பேசுவார். நல்லவராகவும் இருப்பார் (என்றும் கூறினர்)

திருக்குர்ஆன் 3:46

அவர் குழந்தையைச் சுட்டிக் காட்டினார்! தொட்டிலில் உள்ள குழந்தையிடம் எவ்வாறு பேசுவோம்? என்று அவர்கள் கேட்டார்கள். . உடனே அவர்

(அக்குழந்தை), நான் அல்லாஹ்வின் அடியான். எனக்கு அவன் வேதத்தை அளித்தான். என்னை நபியாக்கினான்.

திருக்குர்ஆன் 19:29, 19:30

## இயேசு இஸ்ரவேலர்களுக்கு மட்டுமே தூதர்

அவருக்கு வேதத்தையும், ஞானத்தையும், தவ்ராத்தையும், இஞ்சீலையும் கற்றுக் கொடுப்பான். . இஸ்ராயீலின் மக்களுக்குத் தூதராகவும் (ஈஸாவை அனுப்பினான்.)

திருக்குர்ஆன் 3:48,49

இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு (அனுப்பப்பட்ட) அல்லாஹ்வின் தூதர். எனக்கு முன் சென்ற தவ்ராத்தை உண்மைப்படுத்துபவன். எனக்குப் பின்னர் வரவுள்ள அஹ்மத் என்ற பெயருடைய தூதரைப் பற்றி நற்செய்தி கூறுபவன் என்று மர்யமின் மகன் ஈஸா கூறியதை நினைவூட்டுவீராக! அவர்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்த போது இது தெளிவான சூனியம் எனக் கூறினர்.

திருக்குர்ஆன் 61:6,

## இயேசு திருமணம் செய்தார்

உமக்கு முன் தூதர்களை அனுப்பினோம். அவர்களுக்கு மனைவியரையும், மக்களையும் ஏற்படுத்தினோம். எந்த ஒரு தூதரும் அல்லாஹ்வின் விருப்பமின்றி எந்த அற்புதத்தையும் கொண்டு வர முடியாது. ஒவ்வொரு தவணையும் பதிவு செய்யப்பட்டுள்ளது.

திருக்குர்ஆன் 13:38

## நபிகள் நாயகம்பற்றி இயேசு முன்னறிவிப்பு

இஸ்ராயீலின் மக்களே! நான் உங்களுக்கு (அனுப்பப்பட்ட) கர்த்தரின் தூதர். எனக்கு முன் சென்ற தவ்ராத்தை உண்மைப் படுத்துபவன். எனக்குப் பின்னர்

வரவுள்ள அஹ்மத் என்ற பெயருடைய தூதரைப் பற்றி நற்செய்தி கூறுபவன் என்று மேரியின் மகன் இயேசு கூறியதை நினைவூட்டுவீராக! அவர்களிடம் தெளிவான சான்றுகளைக் கொண்டு வந்த போது இது தெளிவான சூனியம் எனக் கூறினர்.

திருக்குர்ஆன் 61:6

இயேசுவுடைய கொள்கையை - அவரது பிரச்சாரத்தை - கூட்டாமல், குறைக்காமல், சிதைக்காமல் அதே உயிரோட்டத்துடன் திருக்குர்ஆன் இங்கே எடுத்துரைக்கின்றது.

கிறித்தவ நண்பர்களே! பரலோக ராஜ்ஜியத்தில் நீங்கள் நிறுத்தப்படும் போது இயேசு உங்களைக் காப்பாற்றுவார் என்று நம்பிக் கொண்டிருக்கும் நண்பர்களே! என்னை நோக்கிக் காப்பாற்றுமாறு அலறுபவன் பரலோக ராஜ்ஜியத்தில் பிரவேசிக்க முடியாது. என் பிதாவை நோக்கி இவ்வாறு அழைப்பவனே பரலோக ராஜ்ஜியத்தில் பிரவேசிக்க முடியும் என்று இயேசு கூறியதை பைபிளிலிருந்து முன்னர் எடுத்துக் காட்டினோம். இதே உண்மையைத் திருக்குர்ஆனும் மிகத் தெளிவாகக் கூறுகின்றது.

கிறித்தவ நண்பர்களே! பரலோக ராஜ்ஜியத்தில் நுழைய உங்களுக்கு விருப்பமிருந்தால்....

இயேசுவைச் சிறந்த மனிதராகவும், தேவனின் தீர்க்கதரிசியாகவும் ஏற்றுக் கொள்ளுங்கள்! அவரைக் கடவுள் என்றோ, கடவுளின் மகன் என்றோ கூறாதீர்கள்!

இயேசுவின் போதனையைத் தூய வடிவில் கூறி, பதினான்கு நூற்றாண்டுகளாக அதை நிலைநிறுத்தி வரும் தூய இஸ்லாத்தில் உங்களை இணைத்துக் கொள்ளுங்கள்! ஜெயம் பெறுங்கள்!

இதனால் இயேசுவை மறந்தவர்களாக, அவரை அலட்சியப்படுத்தியவர்களாக நீங்கள் ஆக மாட்டீர்கள்! மாறாக இஸ்லாத்தில் நீங்கள் இணைவதன் மூலம் இயேசுவை உரிய முறையில் மதிப்பவர்களாகவும், அவரது போதனைகளைத்

தூய வடிவில் நடைமுறைப்படுத்தியவர்களாகவும் ஆவீர்கள். பரலோக ராஜ்ஜியத்தில் நித்திய ஜீவனை அடைய தேவன் அருள் புரியட்டும்! ஆமென்!